# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.
## திருமலையில் தங்குவசதி விவரங்கள்

### ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி மைய பரப்பு

| விடுதி மற்றும் குடில்கள் பெயர்கள் | கட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|
| ஆம்ப்ரோ விருந்தினர் விடுதி | |
| (அ) பெரிய அறைத்தொகுதிகள் ஒவ்வொன்றும் இரண்டு ... | 1000-00 |
| (ஆ) சிறிய அறைத்தொகுதி-ஒன்று ... | 500-00 |
| பால குடீரம் | |
| (6 அறைத்தொகுதிகள்) ஒன்று ... | 500-00 |
| கோதாவரி சதன் | |
| (3 அறைகள்) ஒவ்வொன்றும் ... | 500-00 |
| கும்ப்ளே விருந்தினர் விடுதி | |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 250-00 |
| கோகுலம் விருந்தினர் விடுதி | |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 1000-00 |
| எச்.ஆர்.ஜி. | |
| (ஏ மற்றும் பி பகுதிகள்) ... | 400-00 |
| ஹரிசதன் விருந்தினர் விடுதி | |
| (குளிர்சாதன வசதிகொண்டது) | |
| (அறைத்தொகுதி(1 to 7) ஒவ்வொன்றும்).. | 1000-00 |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதிகள்... | 100-00 |
| (பெரிய அறைத்தொகுதிகள்) | |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதிகள் (சிறிய... அறைத்தொகுதிகள்) | 50-00 |
| ஹில் வ்யூ சொகுசு குடில்கள் ... | 100-00 |
| இந்திரா விருந்தினர் விடுதி | |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 500-00 |
| ஜகன்னாத பவன் ... | 500-00 |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் | |
| மோடி பவன் | |
| (8 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 250-00 |
| நாராயணகிரி விருந்தினர் விடுதி I ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| நாராயணகிரி விருந்தினர் விடுதி II ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| நாராயணகிரி விருந்தினர் விடுதி III ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| நாராயணகிரி குடில்கள் | |
| (17 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 400-00 |
| ராம் பகிச்சா விருந்தினர் விடுதி I ... | 100-00 |
| ராம் பகிச்சா விருந்தினர் விடுதி II ... | 100-00 |
| ராம் பகிச்சா விருந்தினர் விடுதி III ... | 100-00 |
| ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி (பிரதானமானது) | |
| (அ) பெரிய அறைத்தொகுதிகள் ஒவ்வொன்றும் இரண்டு ... | 1500-00 |
| (ஆ) மற்றைய 7 அறைத்தொகுதிகள் ஒவ்வொன்றும் ... | 1500-00 |
| ஸ்ரீ லக்ஷ்மி நிலையம் | |
| (3 அறைத்தொகுதிகள்) ஒவ்வொன்றும்... | 500-00 |
| ஸ்ரீ நிகேதன் | |
| (3 அறைகள்) ஒவ்வொன்றும் ... | 1000-00 |
| ஸ்ரீ நிவாசா நிலையம் | |
| (5 அறைகள்) ஒவ்வொன்றும் ... | 500-00 |
| சாந்தி சதன் | |
| (7 அறைத்தொகுதிகள்) ஒவ்வொன்றும்... | 500-00 |
| சிறப்பமைப்பு குடில்கள் ... | 400-00 |
| எஸ்.வி. விருந்தினர் விடுதி ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| ஸ்ரீவாரி குடீர் விருந்தினர் விடுதி ... | 2000-00 |
| (குளிர்சாதன வசதி கொண்டது) (அறைத்தொகுதி ஒன்று முதல் 4 வரை முழு விருந்தினர் விடுதியும்) | |
| சுராபுரம் தோட்டம் குடில்கள் | 250-00 |
| சேஷாத்ரிநகர் விருந்தினர் விடுதி ... | 100-00 |
| வித்யாசதன் பெரிய அறைத் தொகுதி (ஒன்று) ... | 1500-00 |
| (அ) மற்றைய அறைத்தொகுதிகள் ... | 500-00 |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் | |
| வராஹசுவாமி விருந்தினர் விடுதி ... | 100-00 |

### டி.பி. குடில்கள்

| | |
|---|---|
| (2 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 150-00 |
| தனி அறை ... | 30-00 |
| வெளிப்புற குடில்கள் ... | 75-00 |
| டி.பி.சி.யில் சிறப்பமைப்பு குடில்கள் | |
| (அ) குடில் எண்கள்61 A, B (குடில்களுக்கு உள்ளே) ... | 400-00 |
| (ஆ) 57, 58, 60 A, B ... | 400-00 |
| (இ) 62A, B; 64Q, A, B; 65, A, B; 66, 67 69 A,B ... | 400-00 |
| மங்களகிணறு குடில்கள்(எம்.பி.சி.) ... | 75-00 |
| (அ) (2 அறைத்தொகுதிகள்) ஒவ்வொன்றும் ... | 150-00 |
| முழு குடில் எண். 31, A,B; 31 C,D; ... | 150-00 |
| வேலி வ்யூ குடில் (வி.வி.சி.) ... | 75-00 |
| (3 அறைத்தொகுதிகள்) | |
| ஒவ்வொன்றும் 44 AB; 47 AB; 50 AB ... | 150-00 |
| ஆழ்வார் ஏரி குடில்கள் (ஏ.டி.சி.) ... | 50-00 |
| ஏ.டி.சி. தனியறை (ஒவ்வொன்றும்) ... | 30-00 |
| அஞ்ஜனாத்ரி நகர் குடில(ஏ.என்.சி.) ... | 15-00 |
| கருடாத்ரி நகர் குடில்(ஜி.என்.சி.) ... | 15-00 |
| சங்குமிட்டா குடில்கள்(எஸ்.எம்.சி.) ... | 15-00 |
| சேஷாதரிநகர் குடில்கள்(எஸ்.என்.சி.) ... | 15-00 |
| ஹில்வ்யூ குடில்கள் (சாதாரணமானவை) ... | 15-00 |

(திருமலையில் தங்குவசதி கோரும் யாத்திரிகர்கள் ரூ. 100/-ஐ "Assistant Executive Officer, (Reception I) T.T.D., Tirumala" எனும் பெயரில் ஒரு வங்கி காசோலை மூலமாக, தங்கும் தேதி பற்றிய ஆங்கிலத்தில் எழுதப் பட்ட விவரங்களுடன்; மேற்குறிப்பிட்ட முகவரிக்கு, 30 நாட்களுக்கு முன்பேயே அனுப்புதல் வேண்டும்.)



தத்தாத்ரேயம் மஹாத்மாநம் வரதம் பக்தவத்ஸலம்
பிரபந் நார்த்தி ஹரம் வந்தே ஸ்மர்த்தகாமி ஸநோவது ॥
சரணுகத தீனார்த்த பரித்ராண பராயணம்
நாராயணம் விபும் வந்தே ஸ்மர்த்தகாமி ஸநோவது ॥

[மகாத்மாகவும், வரங்களை அளிப்பவராகவும், பக்தர்களிடத்தில் தாயன்பு கொண்டவராகவும், அடிபணிந்தவர்களின் தாபங்களைப் போக்குபவராகவும், சரணமடைந்தவர்களையும் தீனர்களையும் பீடிக்கப் பட்டவர்களையும் காப்பதையே விரதமாகக் கொண்டவராகவும், நாராயண வடிவம் கொண்டு எங்கும் பரந்திருப்பவராகவும் உள்ள ஸ்ரீதத்தாத்ரேயரை வணங்குகிறேன்.]

-ஸ்ரீ குரு தத்தாத்ரேயர் ஸ்தோத்திரம்

வாருங்கள்! காணுங்கள்!!

திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# ஆலய தரிசனம்




திருப்பதி மற்றும் அதனைச்சுற்றியுள்ள முககிய திருக்கோயில்களை மிக எளிதில் பக்தர்கள் தரிசிக்கும் வண்ணம் தி.தி. தேவஸ்தானம் ஆலய தரிசனத்தை அறிமுகப்படுத்தியுள்ளது. ஒவ்வொரு நாளும் காலை 6 மணி, 10 மணி மற்றும மாலை 3 மணி ஆகிய நேரங்களில் திருப்பதி இரயில் நிலையத்திற்குப் பின்புறம உள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் இரண்டாவது தரும சத்திர வளாகத்திலிருநது இதற்கென்றே சிறப்பு பேருந்துகள் புறப்படுகின்றன.

காணும் ஆலயங்கள் :

1) ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருசசானூர்.
2) ஸ்ரீ கல்யாணவேங்கடேஸ்வரசுவாமி திருக்கோயில, ஸ்ரீனிவாசமங்காபுரம.
3) ஸ்ரீ அகஸ்தீஸ்வரசுவாமி திருககோயில, தொணடவாடா.
4) ஸ்ரீ கபிலேஸ்வரசுவாமி திருககோயில், திருபபதி.
5) ஸ்ரீ ஹரேராம ஹரேகிருஷ்ண திருக்கோயில், திருப்பதி.
6) ஸ்ரீ கோதண்டராமசுவாமி திருக்கோயில, திருப்பதி.
7) ஸ்ரீ கோவிந்தராஜசுவாமி திருக்கோயில, திருபபதி.
8) வட்டார விஞ்ஞான மையம, திருபபதி.

பேருந்து கட்டணம் :

| | | |
|---|---|---|
| பெரியோர் | : | ரூ. 20/- (நபர் ஒருவர்ககு) |
| சிறுர் | : | ரூ. 10/- (நபர் ஒருவர்க்கு) |

[சிறப்பு தரிசன வசதியும் செயதுதரப்படும்.]




சிறப்பாசிரியர் :
திரு. எம்.கே.ஆர். விநாயக், ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

❋ ❋ ❋

ஆசிரியர் :
திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

❋ ❋ ❋

துணை ஆசிரியர் :
திரு. வ.கோ. சொக்கலிங்கம், எம்.ஏ.,

❋ ❋ ❋

அச்சிடுபவர் :
திரு. எம். லக்ஷ்மண் ராவ்,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி

❋ ❋ ❋

பிரதிகளுக்கு :
EDITOR,
"Sapthagiri" T.T.D., Tirupati.
Phone : 22294

❋ ❋ ❋

தனிப்பிரதி ரூ. 4/-
வருடச்சந்தா ரூ. 48/-

*வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால்*
*வேங்கடமே மெய்வினைநோய் தீர்ப்பதுவும்*

மலர் 29 டிசம்பர் - 1998 இதழ் 7

| உள்ளுறை | பக்கம் |
|---|---|




**அட்டைப்பட விளக்கம்**

முன் அட்டை : *பிரம்மன் திருஉருவச்சிலை - திருமலை (தர்மகிரி)*
பின் அட்டை : *ஸ்ரீவில்லிபுத்தூர் கோயில் விமானம்.*

## உங்களுடன்....

உலகில் பகவானின் படைப்பில் மனிதபடைப்பு மேலானது; புனிதமானது; வியப்பதற்குரியது; கிடைப்பதற்கரியது. இப்பிறவி எடுக்க பூர்வ ஜன்ம புண்ணியம் இருக்கவேண்டும். இல்லையேல் இப்பிறவி கிட்டவே கிட்டாது. ஆனால் மனிதன் இப்புனிதமான பிறவியை தவருக எடைபோடுகிருன். அதற்குக் காரணம் அவன் இன்னும் அறியாமையிலே மூழ்கியிருப்பதுதான். பாவம் மனிதன் மட்டும் என்ன செய்யமுடியும்? அவனைச் சுற்றியுள்ளச் சூழ்நிலைகள், சுற்றுப்புறங்கள், அவன் உட்கொள்ளும் உணவுப் பொருட்கள் அல்லவா அவனை மக்கள் தன்மை யிலிருந்து மாக்கள் தன்மைக்கு மாற்றியமைக்கிறது. இதனால் தான் செய்யும் பாபத்தினால் மனிதன் மேலானப் பிறவி எடுத்தும் பிறவியியைப் போக்கிக்கொள்ள முடியாமல் மறுபடியும் வெகு பாதாளத்திற்கு தள்ளப்படுகிருன். அப்படி என்ருல் மனிதனுக்கு பாபத்தினின்று விடுபட வழியே இல்லையா! என்ருல் இருக்கிறது. எப்பொழுதெனில்? அவன் ஒரு ஆசாரியரைப் பற்றும் பொழுது. ஆசாரியரைப் பற்றி பணிந்து பணிவிடை செய்வதென்பது 'சாரீரத்துவம்' எனப்படுகிறது. கண் ணபிரானும் கீதையில் தேவர், மறையவர், ஆசாரியர், அறிவாளிகள் இவர்களை வழிபடுதலை 'உடல்வழித்தவம்' என்கிருர். இதுபற்றியே ஆதிசங்கரரும் தன் பஜகோவிந்தத்தின் கடைசியில் 'குரு சரணம்புஜநிர்பர பக்த: ஸம்ஸாராத் அசிராத் பவமுக்த: !' என்கிருர். அதாவது 'ஆசாரியர் ஒருவரைப் பற்றிக்கொள்' என்பது அவருடைய கருத்து. 'ஆசார்ய தேவோபவ' எனும் வேத வாக்கியமும் அவருடைய வாக்காக வெளிவந்திருக்கிறது.

ஆசாரியரை ஒரு தூதுவராகவும் நடுவராகவும் கொள்ளலாம். இறைவனைக் காணும் முன்பு இத்திவ்ய தரிசனத்தின் முதல் அங்கமாக சீடன் ஆசாரியரைத்தான் காண்கிருன். பிறகு அவ்வாசாரியர் மந்திரங்களை உபதேசிப்பதோடு ஈசுவரனாக மாறி ஈசுவர ஸ்வரூபத்தையும் காட்டுகிருர். ஆசாரியர் மகாமந்திரத்தை மட்டுமா உபதேசிக்கிருர்? ஆத்மாவுக்குள் இறையன்பை அல்லவா செலுத்துகிருர். மனித மனம் அமைதியைப் பெற ஆசாரியர் அருள் மிகவும் அவசியம். ஒரு சீடனுக்கு இறைவன் திருவருளைக் காட்டிலும் ஆசாரியருடைய இன்னருளே இன்னல்களைப் போக்கி வீடுபேற்றை அளிக்கவல்லது. எனவே ஆசாரியரை வணங்கி பணிவிடை செய்வது ஞானிகளின் தகுதிகளுள் ஒன்று. தற்பெருமையின்மை, வீண் பகட்டின்மை, அகிம்சை, பொறுமை, நேர்மை, தூய்மை, ஊக்கம், அடக்கமுடமை இப்பண்புகளுடன் ஆசாரிய சேவையும் பக்தியும் மனிதனுக்குத் தேவை.

கலிகாலம் முற்றும் தருவாயில் அவதாரம் அவசியமாகிறது. 'எப்பொழுது தர் மம் சீரழிகிறதோ அதர்மம் தலைதூக்குகிறதோ அப்போது நான் அவதாரம் எடுத்து தர்மத்தைக் காப்பேன்' என்பது கண்ணனுடைய திருவாக்கு. முன் யுகங்களில் அசு ரர்கள் என்பவர்கள் மனிதர்களிடம் வேறுபட்டு தனியாகக் காணப்பட்டனர். எனவே அவர்களை மட்டும் அழித்ததினால் பிரச்சனைத் தீர்ந்தது. ஆனால் இக்கலிகாலத்தில் அசுரர்கள் என்று தனியாக இல்லாமல் மனிதர்களின் மனத்தில் குடிகொண்டுள்ளனர். அதாவது அசுரத்தன்மையை மனிதன் கடன்வாங்கிக் கொண்டுள்ளான். இதனால்

தர்ம காரியங்கள் தடைப்பட்டு விட்டது. மக்கள் சிற்றின்பத்தையே பேரின்பமாக கழிக்க ஆரம்பித்து விட்டனர். இப்படி கலி முற்றும் போது வேத சடங்குகளும் தேவ பூஜைகளும் மறையத் தொடங்குகின்றன. கற்பு என்றால் என்ன என்று கேட்கும் அளவிற்கு மானிட இனம் மாசுபட்டுள்ளது. பூமி விளையாது போகிறது. தர்மமும் புண்யமும் இன்றி மழையும் பெய்யாது பொய்த்துவிடுகிறது. எனவே மக்களின் மனதிற்குள் புகுந்து அசுரர்களை வெளியேற்றுவது உபதேசம் எனும் கருவியின் மூலம்தான் முடியும். அதற்கான பொறுப்புகளை ஏற்கக்கூடியவர்களே ஆசாரியர்கள். இந்த ஆசாரியர்களுக்கெல்லாம் ஆசாரியராக வழிகாட்ட மார்கழி மாதம் பௌர்ணமியில் அத்திரி மகரிஷிக்கும் அனசூயைக்கும் மகனாக, கற்புக்கரசியான அனசூயையின் கற்பிற்கு களங்கம் கற்பிக்க வந்த மும்மூர்த்திகளின் அம்சமாக அவதரித்தவரே "ஸ்ரீதத்தாத்ரேயர்".

கலியின் கொடுமையைப் போக்க மும்மூர்த்திகளே ஒன்று சேர்ந்து அவதாரம் பண்ண வேண்டியிருந்தது. அவர்களின் அருள் வடிவமே 'ஸ்ரீதத்தாத்ரேயர்'. இவர் மகாஞானி, மாபெரும் யோகி, ஜிதேந்திரியர், அக்ஞானத்தை அகற்றும் கற்பக மரம். இம்மகான் பரமாத்வாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் இடையே தூதராகவும் மற்றும் அவதூதராகவும் இருந்திருக்கிறார். அவதூதரா! அப்படி என்றால் என்ன? ஆம். உடை அணியாமல் பிறந்தவாறு இருக்கும் நிலையிலுள்ள யோகிகளைக் குறிக்கும். இதன் தத்துவம் உடை எவ்வாறு உடலை மறைக்கிறதோ அவ்வாறு அக்ஞானம் மனிதர்களை மறைத்து உலகத்தின் வேறுபாட்டினை உண்டுபண்ணுவதாகும். அக்ஞானம் எனும் மேலாடையை களைந்தவர்கள் தான் அவதூதர்கள். இத்தகையவர்களுக்கு உலகமே ஒரு தோற்றமாகும். இந்த உலகின் மாறுதல்கள் எதுவும் இவர்களை அணுகாது. ஆகையால் இவர்கள் உயிருடன் வாழும் நிலையிலும் இறந்தவரைப் போல எதிலும் ஒட்டாமல் இருந்துவிடுவர். இவர்களை 'விதேஹமுக்தர்கள்' என்று சாத்திரங்கள் பகர்கின்றன. அவதூதர்கள் அனைவரும் ஸ்ரீதத்தாத்ரேயர் பரம்பரையில் **வந்தவர்களே.**

**இந்த அவதூத நிலையை நாம் தானாக ஏற்படுத்திக்கொள்வதல்ல. அது** தானாக நம்மை வந்தடைய வேண்டும். இந்த நிலை பரப்பிரம்ம நிலையாகும். இப்படி அவதூதராக இருந்த தத்தாத்ரேயர் இரண்டு கீதைகளை இயற்றினார். ஒன்று 'ஜீவன் முக்த கீதை' மற்றொன்று 'அவதூத கீதை' அதோடு வேத சாகைகளில் **இரு உபநிடதங்கள் இயற்றினார். ஒன்று 'ஜாபாலதர்சனோபநிஷத்' மற்றொன்று** 'அவதூத உபநிஷத்' ஆகும். மனதை அடக்க வழி தெரியாமல் அக்ஞான இருளில் தவித்துக்கொண்டிருந்த முனிவர்கள், யோகிகள், பக்தகோடிகள் அனைவருக்கும் அருள் சுரந்து பிரம்ம ஞானத்தை உபதேசிக்க எடுத்த அவதாரமே இந்த தத்தாத்ரேய அவதாரம். இவ்வவதார மகிமையை சொல்லால் அடக்கமுடியாது. ஆகவே சிரமேற்கொண்டு சிந்தையில் வைப்போம். அப்பொழுது அம்மகானுடைய திருவருள் நம்மை அவதூதராக ஆக்கி பரப்பிரம்ம நிலையான பேரின்பக் கடலில் ஆழ்த்தும் என்பதில் ஐயமில்லை.



# செய்திச் சுருக்கம்

## திருமலையில் புஷ்பயாகம்

திரும்லையில் திருவேங்கடவனுக்கு அண்மையில் வருடாந்திர புஷ்பயாகம் வெகுச்சிறப்பாக நடத்தப்பட்டது. ஒவ்வொரு ஆண்டும் பிரம்மோத்ஸவத்திற்கு பிறகு வரும் ஐப்பசி திருவோண நட்சத்திரத்தின் போது திருமலையில் மிக வைபவமாக பலவகையான வண்ணப் பூக்களைக் கொண்டு புஷ்பயாகம் நடத்தப்படுகிறது.

இப்புஷ்பயாகம் பல ஆண்டுகளாக நடந்து வந்த போதிலும் இடையில் நின்று விடவே, தி.தி. தேவஸ்தானம் புத்துயிரூட்டி 16 ஆண்டுகளாக இவ்விழாவினை தொடர்ந்து கோலாகலமாக கொண்டாடிவருகிறது.

அண்மையில் நடைபெற்ற புஷபயாகத்தின் போது காலை 8 மணியிலிருந்து நண்பகல் 12 மணி வரை திருக்கோயிலின் கல்யாணோத்ஸவ மண்டபத்தில் ஸ்ரீதேவி பூதேவி சமேத ஸ்ரீமலையப்ப சுவாமிக்கு ஸ்நபன திருமஞ்சனம் எனும் மங்களாபிஷேகம் நடைபெற்றது. அச்சமயம் ஹோமங்களும் வளர்க்கப்பட்டன.

அதன்பிறகு வெவ்வேறு வகையான வண்ணப் பூக்களினால் புஷ்பார்ச்சனை நடைபெற்றது. இப்புஷ்பார்ச்சனையில் சுமார் ஆயிரம் கிலோ கொண்ட புஷ்பங்கள் பயன்படுத்தப்பட்டன. இவ்வர்ச்சனை வேத மந்திரங்கள் ஒலித்திட, சுமார் 21 முறை ஸ்ரீமலையப்ப சுவாமிக்கு நடைபெற்றது.

திருமலையில் நடைபெற்ற புஷ்பயாகத்தில் செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே. ஆர். விநாயக் அவர்கள், இணைச் செயலாட்சித்தலைவர் திரு. பி. பாலசுப்ரமண்யம் (திருமலை) மற்றும் உயர் அலுவலர்களும் பங்கு கொண்டனர். ரூ. 5,000-ஐ கட்டணமாகச் செலுத்தி பக்தர்களும் இச்சேவையில் பங்கு கொண்டனர். அதன்பின்னர் அன்று மாலை திருமலை திருக்கோயில் உள் பிரகாரத்தில் திரு மலையப்ப சுவாமி திருவீதிவலம் வந்தார்.



## திருமலையில்.....

ஆந்திர மாநில அரசின் அறநிலையத்துறை அமைச்சர் திரு. தாமசர்லா. ஆஞ்சநேயலு திருமலை திருவேங்கடவனை அண்மையில் தரிசித்தார். இவரது திருமலை வருகை பதவியேற்றபின் இதுவே முதல் முறையாகும். இது போது தி.தி. தேவஸ்தான செயலாட்சித்தலைவர் திரு. எம்.கே.ஆர். விநாயக் அவர்கள், இணைச்செயலாட்சித்தலைவர் திரு. பாலசுப்ரமண்யம், தேவஸ்தானப் பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர்கள் திரு. மகாதேவ நாயுடு, திரு. ராதாகிருஷ்ண மராஜு, திருமதி. எர்னேனி சீதாதேவி, திருமதி. ஈபூரி சீதாராமம்மா, திரு. நரசிம்மலு, திரு. ராமாநாயுடு திரு. ராஜமோகன் ரெட்டி, திரு ஸ்ரீநிவாச ரெட்டி முதலானோர் அவரை வரவேற்றனர். அன்றிரவு குடும்பத்தோடு அவர் சுவாமியை தரிசித்தார். அதன்பின்னர் அர்ச்சகர்கள் அவரை ரங்கநாயக மண்டபத்தில் வேதமந்திரங்களால் ஆசீர்வதித்து சுவாமி சேஷ வஸ்த்திரத்தை அவருக்கு வழங்கினர். பின்னர் செயலாட்சித்தலைவர் கோவில் பிரசாதத்தை அமைச்சர் அவர்களுக்கு அளித்தார். மறுநாள் அமைச்சர் திருச்சானூர் சென்று பத்மாவதி தாயாரை தரிசித்தார்.

### கல்யாண மண்டபம்

அண்மையில் சித்தூர் மாவட்டத்தைச் சேர்ந்த நாராவாரி பள்ளியில் திருமலை திருப்பதி தேவஸ்தானம் கட்டிய கல்யாண மண்டபத்தை ஆந்திரமா நில அரசின் இந்து அறநிலையத்துறை அமைச்சர் திரு. தாம சர்லா. ஆஞ்சநேயுலு அவர்கள் திறந்துவைத்தார். இது போது அமைச்சர் பேசுகையில் 'ஆந்திரமாநிலத்தில் உள்ள அனைத்து கோயில்களின் வளர்ச்சிக்கு வழி வகுப்பேன்' என்ருர். இந் நிகழ்ச்சியில் ஆந்திர மாநில அரசு அமைச்சர்கள் திரு. பி. சுப்பய்யா, திரு. தும்மல நாகேஸ்வரராவ், திரு. பொஜ்ஜல கோபாலகிருஷ்ணுரெட்டி, சட்டமன்ற உறுப்பினர் திரு. நாரா. ராமமூர்த்தி நாயுடு முதலானோர் கலந்துகொண்டு கல்யாண மண்டபத்தின் அருகாமையில் மரக்கன்றுகளை நட்டனர். பின்னர் அமைச்சர் திரு. சுப்பய்யா அவர்கள் ஸ்ரீனிவாசமங்காபுரத்தில் தி.தி. தேவஸ்தான கல்யாண மண்டப கட்டிடத்திற்கான அடிக்கல் நாட்டினார்.

### பொறுப்பாண்மைக்குழுவின் முடிவுகள்

அண்மையில் திருமலையில் நடைபெற்ற தி.தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக்குழு கூட்டத்தில் கீழ்வரும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன.

* அங்கீகாரம் பெற்ற தனியார் பாதுகாப்பு முகவர் நிலையைத் தேர்ந்தெடுத்து அந்த முகவர் நிலையைச் சேர்ந்த நபர்களை எல்லா முறையிலும் பரிசோதித்து அவர்கள் மூலம் திருமலை திருக்கோயில் மிகவும் சிறப்பான முறையில் பாதுகாக்க முடிவு எடுக்கப்பட்டது.



* தி.தி. தேவஸ்தானத்தின் மேலாண்மையில் உள்ள இதர திருக்கோயில்களிலும், அர்ச்சனை, ஆரத்தி டிக்கட்டுகளை ரூ. 5 ஆக உயர்த்த முடிவு மேற்கொள்ளப்பட்டது.

* இவ்வாண்டு தெலுங்கு பஞ்சாங்கத்தோடு, தமிழ், கன்னட மொழிகளிலும் கூட 10 ஆயிரம் பஞ்சாங்க பிரதிகளை வெளியிட முடிவு செய்யப்பட்டது.

* திருமலை திருக்கோயில் எதிரில் ஆயிரங்கால் மண்டபத்தில் உள்ள அரும்பொருட்காட்சி கூடத்தினை புதியதாக கட்டிய த்யானவிஜ்ஞான மந்திரத்திற்கு மாற்ற முடிவு மேற்கொள்ளப் பட்டது.

* தி.தி. தேவஸ்தானம் ஆழ்வார் திவ்யப்ரபந்த திட்டத்துறையினரால் அனந்தபுரத்தில் நடத்தவிருக்கும் ஸ்ரீகிருஷ்ண தேவராயலு மகா உத்ஸவத்திற்கு ஒரு இலட்சம் ரூபாய் அளிக்க முடிவு மேற்கொள்ளப் பட்டது.

* திருப்பதி-திருமலை நடைபாதையை செப்பனிட்டது போன்று சந்திரகிரி பக்கம உள்ள ஸ்ரீவாரி மெட்டு வழியினைக்கூட சீர் செய்வதற்கு முடிவு மேற்கொள்ளப்பட்டது.

### ஒலிநாடா வெளியீடு

தி.தி. தேவஸ்தான ஆழ்வார் திவ்யப்ரபந்த திட்டத் துறையின் சார்பில் ஆழ்வார்கள் அருளிய நாலாயிர திவ்யப்ரபந்தத்தை 72 ஒலிநாடாக்கள் மூலமாக அண்மையில் ஆந்திர மாநில முதல்வர் திரு. நாரா. சந்திரபாபு நாயுடு அவர்களின் திருக்கரங்களால் திருமலையில் வெளியிடப்பட்டது. இந்த ஒலிநாடாக்கள் அடங்கிய பேழையை ரூ. 2000க்கு தி.தி. தேவஸ்தானம் விற்பனைக்கு அளித்து வருகிறது. இது தி.தி. தேவஸ்தானத்தின் ஒரு மாபெரும் சாதனை, வெற்றி என்றே கொள்ளவேண்டும். ஏட்டிலே உள்ள நாலாயிரத்தை நாட்டில் உள்ள அனைவரும் அறிந்துய்ய, படிக்காத பாமரரும் கேட்டு மகிழ

பாட்டிலே இசைத்தவர் ஸ்ரீமான் உ.வே. தி.அ. கோபாலாச்சாரிய ஸ்வாமி. இவர் தி.தி. தேவஸ்தான எஸ்.வி. கீழ்தி சைக் கல்லூரியில் சமஸ்கிருத வியாகர்ன பேராசிரியராகவும் மற்றும் துறைத்தலைவராகவும் 36 ஆண்டு காலம் அயராது பணியாற்றி ஓய்வு பெற்றவர். இவர் திருமலை அனந்தாழ்வான் வம்சத்தின் வழி வந்தவர். இவர் தன்னுடைய சகோதரராகிய ஸ்ரீமான் உ.வே. தி.அ. கிருஷ்ணமாசாரிய ஸ்வாமியை குருவாக ஏற்றுக் கொண்டவர். இவர் உ.வே. கச்சி கிடாம்பி யாமுநாசாரிய ஸ்வாமி அவர்களின் வழிகாட்டுதலின் கீழ் நாலாயிர திவ்யப்ரபந்த புலமைப் பெற்றவர். இவர் 18 வயதிலிருந்தே பாட்டிசைப்பதில் வல்லமைப் பெற்றவர். இவர் ஸ்ரீமான் உ.வே. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரியர் ஸ்வாமியினால் கௌரவிக்கப்பட்டவர். இவர் அருளிச்செயல் வல்லோன்' எனும் விருதினைப் பெற்றவர். இவர் திருப்பதியில் தன்னிகரில்லா தனிச்சிறப்பினை அருளிச்செயல் இசைப்பதில் பெற்றுத் திகழ்கின்றார். இவருடைய, இனிய இசையமுதத்தை இவ்வுலகோர் பருக திருமலை நடையில் நாலாயிரம் பாடல்களையும் ஒலிநாடாக்கள் மூலம் தி.தி. தேவஸ்தானம் பதிவு செய்துள்ளது. இம்மேன்மைமிகு திருப்பணியில் மறைமுகமாகவும் நேர்முகமாகவும் பலர் பங்கேற்றனர். அவர்களுள் முறையே ஸ்ரீமான் உ.வே. எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், ஆசிரியர், ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம், திருச்சி, ஸ்ரீமான் உ.வே. டாக்டர் மா. வரதராஜன், பேராசிரியர் திருவேங்கடவன் பல்கலைக்கழகம், திருப்பதி ஆகியோர் குறிப்பிடத் தக்கவர்கள். இப்பணி செவ்வனே நடைபெற ஆக்கமும் ஊக்கமும் அளித்தவர் திரு. காமிசெட்டி ஸ்ரீநிவாசசெட்டி, இயக்குனர் தி.தி. தேவஸ்தான ஒலிப் பதிவு திட்டத்துறை, திருப்பதி அவர்கள் ஆவர்.

## திருமலை நம்பி உத்ஸவங்கள்

திருமலையின் முதற் குடிமகன் எனக் கருதப்படும் திருமலை நம்பியின் 1025-ஆவது பிறந்தநாள் "திருமலைநம்பி ஸ்ரீவேங்கடேசுவரர் கைங்கரிய மற்றும் அறப்பொறுப் பாண்மைக்குழு" (திருமலைநம்பி தோழப்பாச்சாரிய வமிசத்தினரின் குழு)வின் ஆதரவில் அண்மையில் திருமலையிலுள்ள திருமலைநம்பியின் கோயிலில் தி.தி. தேவஸ்தானச் செயலாட்சித் தலைவர், உயர்திரு. எம்.கே. ஆர். விநாயக், இ.ஆ.ப. அவர்களின் முன்னிலையில் விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. அதுசமயம் திருமலை நம்பி ஆச்சாரியரின் கைங்கரியம், சிறப்பாகத் தினந்தோறும் ஆகாசங்கை தீர்த்தத்திலிருந்து இரண்டு குடங்கள் எடுத்து வந்த திருச்சேவை பற்றிய தகவல் மேற்படி குழுவின் செயலாளர் மற்றும் பொருளாளர் அவர்களால் விளக்கப்பட்டது; முதல் ஆச்சாரிய புருஷரான திருமலை நம்பியின் கோயிலுக்கு வேலி அமைத்து, கோயில் முகப்பில் அவர் புரிந்த மாபெரும் கைங்கர்யம் பற்றிய தகவல் அடங்கிய கற்பலகை அமைக்குமாறு தேவஸ்தான' அதிகாரியிடம் விண்ணப்பிக்கப்பட்டது.

## திருப்பதியில்.....

திருமலைநம்பியின் திருநட்சத்திரமான அநுஷம் திருப்பதி ஸ்ரீகோவிந்தராஜசுவாமி ஆலய வளாகத்திலுள்ள திருமலைநம்பி சந்நிதியில் திருமலை நம்பி தோழப்பாச்சாரிய வமிசத்தினரால் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. திருமலை ஸ்ரீசுவாமி கோயிலிலிருந்து அப்பப்படி (திருமலைநம்பியின் தொண்டினைப் பாராட்டும் வகையில் ஸ்ரீசுவாமி உகந்தனுப்பும் அப்பம்) அனுப்பப்பட்டு, அது உரிய மரியாதையுடன் ஊர்வலமாக திருமலைநம்பி சந்நிதிக்கு கொண்டுவந்து சமர்ப்பிக்கப்பட்டது. ஸ்ரீதேவி, பூதேவிகளுடன் ஸ்ரீகோவிந்தராஜசுவாமி எழுந்தருளியிருந்தது விழாவிற்குச் சிறப்புச் சேர்த்தது.



## விண்ணப்பம்

தி.தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீவேங்கடேஸ்வரர் கோயிலில் நடைபெறும ஆர்ஜித ஸேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத்தொகையினை தேசீயமயமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராப்ட்' D.D. அல்லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்புவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

செயலாட்சித்தலைவர்

# அமலனாதிபிரான் அருளிய பாணர்

திரு. வி.எஸ். ஸ்ரீநிவாசன் - ஆதம்பாக்கம்.

## பாணனார் தோற்றம்

"ஊரெனப்படுவது உறையூர்" என்பது தொன்று தொட்ட வழக்கு. இவ்வூர் சோழ மன்னர் தலை நகரங்களுள் ஒன்ருகும். பண்டைத் தமிழ்க் குடியினருள் ஒருவர் பாணர் எனப்படுபவர். இக்குடியினர் இழி குலத்தவராக அந்நாளில் கருதப்பட்டாரேனும் இசையில் வல்லவராய் இறைவனையும் 'வேந்தர்களையும்' வள்ளல்களையும் பாடி இன்புறுத்தும் நன் மக்களாவர். இன்னோர் யாழிசைப்பதில் இணையற்றவர். பண்டு, உறையூரில் வாழ்ந்த பாணர் ஒருவர் நெற்பயிர் நிமிர்ந்து நிற்கும் வயல்களிடையே அழுது கொண்டிருக்கும் ஆண்மகவு ஒன்றைக் கண்டு அக மகிழ்ந்து, புத்திரப் பேறில்லாத தமக்கு இறைவன் அளித்த அரும் பேருகக் கருதி வளர்த்து வரலாயினார். திருத்துழாய் தோன்றும் போதே நறுமணத்துடன் தோன்றுதல் போலப் பாண்பெருமான் குழலிப்பருவ முதலே உலகியலில் ஈடுபடாதவராய் இயல்பாகவே ஞானபரிபூரணராக வளர்ந்து வரலானார். தாம் வளரும் குலத்து வித்தையாகிய யாழிசையில் வல்லவரானார். நாளும் தென்திருக்காவேரியின் தென்கரையில் நீராடித் திருவரங்கப் பெருநகரை நோக்கிய வண்ணம் அமர்ந்து அரங்கநகர் அப்பனையே நினைந்து குழைந்து உளமுருகி யாழிசையோடு தம் குரல் இணைய இன்னிசைப் பாடிப் பரவி வருவாரானார்.

## அணியரங்கன் அருள்

ஆண்டுகள் கழிந்தன. அரங்கனார்க்குத் திருமஞ்சன நீர் எடுத்துச் செல்லும் பொருட்டு வந்தோர் தாம் வழக்கமாக நீர் முகக்கும் இடத்திற்கு அருகில் அமர்ந்திருந்த இவரை விலகிச் செல்லும்படி வெருட்டினர. தம்மை மறந்து தியானபரராக



இருந்தபாணர் செவியில் அச் சொற்கள் கேட்கவில்லை. இவன் அடம் செய்கிறுன் என்றெண் ணிச் சினந்து கல்லால் அடித் தனர். பாணர் நெற்றியி லிருந்து உதிரம் பெருகியது. அதையும் உணராது அசைவற் றிருந்தார் பாணர். யோகி களின் உள்ளத்தைக் கோயிலா கக் கொண்டருளும் எம்பெரு மான் இவரிடம் குடிகொண்டி ருப்பதை அறியாது அபசாரப் பட்ட கோயில் கைங்கர்யபரர் கள் வேறூர் இடம் சென்று திருமஞ்சன நீர் முகந்து சென் ருர்கள். அன்று "தெண்ணீர் பொன்னித் திருக்கையால் அடி வருடப் பள்ளி கொள்ளும் கரு மணியின் நெற்றியிலிருந்து உதி ரம் பெருகலாயிற்று. அடியார் கள் திடுக்கிட்டனர். அரசனுக்கு செய்தி விடுத்தனர். யாவ ருக்கும் திகைப்பும் அச்சமும் மேலிட்டன.

பாணபெருமானின் பெரு மையை உலகோர்க்கு வெளிப் படுத்தத் திருவுளங்கொண்ட பெரிய பெருமாள் பாண ரைத் தோளிற் சுமந்து தன் திருமுன்பே அழைத்து வரும் படி அடியார் தலைவரான லோக சார்ங்க முனிவருக்கு ஆணையிட்டார். அவ்வாறே முனிவர் அடியார் குழாத் துடன் சென்று அரங்கனார் கட்டளையை விண்ணப்பிக்க அதுகேட்ட பாணனார் உடல குலுங்கி அடிபணிநது கூசி நிறக, முனிவர் வற்புறுத்திய தால் "பெரிய பெருமாள கௌர வத்தை நாம் குலைகக ஒண் ணுது' என்று கருதி முனிவர தோள்மிசை அமர்ந்தார. அவ ரைச் சுமநது சென்ற முனி வர் திருவரங்கச் செலவனார் திருமணத் தூணகளுக்குளளே இறக்கி விட்டார். தாம் பல ஆண்டுகளாக காவேரிக்க ரையிலிருந்த வண்ணம் திசை நோக்கித் தொழுது பரவச மாய் யாழிசைத்துப் பாடிய ஊழிமுதல்வனைக் கண்களால் கண்டு அவன் வடிவழகில் தம் நெஞ்சைப் பறிகொடுத்து "அமலனாதிபிரான்" எனத்தொ டங்கி அண்டர்கோன் அணி யரங்கன் என்ன முதினைக் கண்ட கண்கள் மற்றொன்றி னைக் காணுவே" என்று முடித் துப் பத்துப்பாட்டுக்களால் திரு வடி முதல் திருமுடிவரை அவ னது பேரெழிலைத் போற் றினார். அவரது பக் திக்கு உகந்த பெரிய பெருமாள் அவரை அத்திருமேனியோடு ஏற்றருள, அனைவரும் காண மறந்து அப்பெருமான் திருவடி களை அடைந்தார். "அமல னாதிபிரான்" என்னும் முதல் தொடரே அவர் அருளிய பிர பந்தத்திற்கு மகுடமாக வழங்க லாயிற்று. திருவரங்கச் செல் வனாரிடம் ஆழ்ந்து ஈடுபட்ட மையால் பாணர் "திருப்பாணுழ் வார்" ஆனார். முனி தோளில் ஏறி வந்தமை தோன்ற "முனி வாகனர்" என்னும் திருநாமமும் இவருக்கு உண்டாயிற்று. இவர் இந்நிலவுலகில் அவதரித்த நாள் கார்த்திகைத் திங்கள் உரோ கிணி நன்னாளாகும்.

## பிரபந்தத்தின் பெருமை

முத்துப் போன்ற பத்துப் பாசுரங்களையுடைய 'அமலனா திபிரான்' என்னும் இப்பிரபந தம ஒன்றே இவர் அருளிச்செய தது. பெரிய பெருமாளின் திரு வடி முதல் திருமுடி வரை அவரது திவ்ய அவயவங்களின அனுபவமே நிறைந்தது. மற்ற விஷயங்களின கலப்பு இல்லா தது; பாணனார்க்குப் பகவதனு பவமே தலையெடுத்து நின்ற தால், 'அடியேன்' என்றே தம் மைக் குறிப்பிடுகின்ருர். மற்ற ஆழ்வார்களைப் போலத் தம் ஊரையும் பேரையும் குறிப்பிடா தது இப்பிரபந்தத்தின் தனிச் சிறப்பாகும். இந்த அனு பவம் முக்தர்களுக்கு அந்தமில் பேரின்ப வீட்டிலே ஏற்படும் பக வதனுபவமாகும். இக் கார ணங்களைக் கொண்டே இப்பிர பந்தம் ஒப்புயர்வில்லாதது என் பர் பெரியோர்.

## வியாக்கியானங்கள்

இப்பிரபந்தத்திற்குப் பெரிய வாச்சான்பிள்ளை, அழகிய மண வாளப் பெருமாள் நாயனார், ஸ்ரீவேதாந்த தேசிகர் ஆகிய மூன்று ஆசாரியர்களின் அழ கிய வியாக்கியானங்கள் உள் ளன. இம்மூவரும் சற்று ஏறத் தாழ சமகாலாத்தவராவர். திரு வரங்கமே இருப்பாகப் பெற்றுப் பெரிய பெருமாளையே தஞ்ச மாகக் கொண்டு வாழ்ந்த பரம விரக்தர்கள் இவர்கள்.

வியாக்கியானங்களுள் ஆச் சான்பிள்ளையது சுருக்கமா னது. அதில் "இப்படி இராமா வதார மல்லது அறியாத திருவ டியைப் போலே யாய்த்து இவ ரும் இவர் தேவாரமான (திரு வாராதனப் பெருமாள் - உம் முடைய தேவாரமோ ஈடு 6, 8,10) பெரிய பெருமாளை யல்லது பரத்வ வ்யூக, விப வங்களை அறியாதபடி" எனப் பாணரது இணையற்ற ஈடு பாட்டினை இயம்புவர் ஆச் சான்பிள்ளை. நாயனாரு டைய விரிவானது பல நயங்க ளைப் புலப்படுத்துவது. இவர் தமது வியாக்கியையில் "ஆழ் வார்கள் இருகரையர் என்னும் படியிறே ஸ்ரீதொண்டரடிப்பொ

டியாழ்வார் ஜகாத்தயம் (ஒன்றிலேயே ஈடுபடல்) "இச்சுவை தவிர யான் போய் இந்திர லோகமாளும் அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகருளானே" -. என்பது காணக. அவரிலும் இவர் பரோபதேசமும் இதர நிராகரணமும் அனுபவ விரோதி என்று பெரிய பெருமாளையே அடிக்கும் முடிக்கும் செவ்விதாக அனுபவிக்கிறூர்" என்பது கூறிக்கொள்ளத் தக்கது. ஸ்வாமி தேசிகன் வழங்கியுள்ளது "முனிவாகன போகம்" என்னும் வியாக்கியானம். முனிவாகனரான திருப்பாணுழ்வாரின் அனுபவம் என்பது இதன் பொருள். ஆழ்வார்களின் அருளிச் செயல்களில் இது ஒன்றுக்கு மட்டுமே தேசிகன் வியாக்கியானம் செய்துள்ளது குறிப்பிடத்தக்கது. இவர் இப்பிரபந்தத்தையே அடிப்படையாகக் கொண்டு "பகவத்தியான சோபானம்" என்னும் துதிநூலை அருளியுள்ளார். அதிலும் பெரிய பெருமாளின் பாதாதிகேசாந்த வருணனையைக் காணலாம். இவர் "அமலனாதிபிரான்" உரையில் "பிரமாணசாரம பிரணவம் என்றும் பிரமேயசாரம் ஸ்ரீரங்கநாதரின் திருவடி நிலைகளே" என்றும் ஆழ்வார் முதல் மூன்று பாசுரங்களில் முதல் எழுத்துக்களால் பிரணவததையும், ஐந்து, ஆறு ஏழாம் பாட்டுககளின் முதல் எழுத்துக்களால் பெரிய பெருமாளின் திருவடி நிலைகளையும குறிப்பிடுகிறூர்" என வடித்துத் தந்துள்ளார். அதாவது முதல் மூன்று பாட்டுக்களின் முதலெழுத்துக்கள அ.உ.ம என்பன. இவை சேரந்தது பிரணவம். ஐந்து, ஆறு, ஏழாம் பாட்டுக்களின் முதல் எழுத்துக களைக் கூட்டினால் 'பாதுகை' என்ருகும். அதாவது எம்பெருமானது திருவடி நிலைகளாகிய பிரமேயம்.

## பாட்டுக்களின் அடைவு

திருக்கமல பாதம். அரைச சிவந்த ஆடை, அந்திபோல் நிறத்து அடையின் மேலே அயனைப்படைத்ததோர் எழில உந்தி, அதன் அருகில் விளங்கும் திருவயிற்று உதரபந்தம என்னும் திவ்யாபரணம், பெரிய பிராட்டியார் கோயில் கடடணமாய அழகு செய்யும் திருமார்பு, மூவுலகும் முற்றும் உண்ட கணடம், முத்தென்ன முறுவல் செயயவாய், நீண்ட அப்பெரிவாய கண்கள், முடிவில்லதோர் எழில் நீலமேனி என்று இவர தாம் அனுபவித்த அடைவில் பாட்டுக்கள் அமைந்துள்ள அழகினை வியாக்கியானங்கள் விவரிக்கின்றன. முடிவில் "கொண்டல் வண்ணனான அணியரங்கன் என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொனறினைக் காணவே" எனக் கண்டுகளித தவர் திருப்பாணர்.

## சில உரை நயங்கள்

முதற்பாட்டு: விணணவர் கோனான பரவாசுதேவனே பரம பதத்தினின்றும் திருமலையில் இறங்கி நின்று, நீள் மதிள்சூழ் திருவரங்கத்தில் அரவின் அணைமிசைகிடந்தான் என்பது திருப்பாணர் அனுபவம். இப்பாட்டில், அமலன், விமலன், நிமலன், நின்மலன் என நான்கு பெயர்களைக் காண்கின்ருேம். இவைகளின் பொருளை மூன்று உரைகளும், தெளிவாக்குகின்றன. இவை முறையே, தன் அடியார்க்கு என்னை அடிமையாக்கிய தூய் மையுடையவன். காரணமின்றியே என்னை ஏற்றருளிய தூய் மையுடையவன். பயன் ஏதும் கருதாது தன்பேறுகளை எனக்கு வழங்கிய தூய்மையுடையவன் என்று புகழ்கின்ருர் என்பதை விளக்குகின்றன. "பெரிய பெருமாளைக் கவிபாடா நிற்கத் திருமலையிலே போவான் ஏன்?" என்று ஒருவர் கேட்க, அதற்குப் பட்டர் "பரமபதத்தினின்றும் திருமதுரையிலே தங்கித் திருவாய்ப்பாடிக்கு வந்தாப்போலே, ஸ்ரீவைகுண்டத்தினின்றும் திருமலையிலே தங்கிக் காணும் கோயிலுக்கு வந்தது!" என உத்தரம் அருளிச் செய்தார் என்பர். "உயர்வற" என்னும் திருவாய்மொழி முதல் பாசுரத்தின் பொருள் இப்பாட்டில் பொருந்தியுள்ளதாக நாயனார் அருளுகின்ருர் நம்மாழ்வார் "துயர் அறு சுடரடி தொழுதெழு" என்ருர். திருப்பாணுழ்வாருக்கு அவை தாமே வந்தன. அவரினும் இவர்க்கு ஏற்றமிது" என்பது நாயனார் நயவுரை.

இரண்டாம் பாட்டு: இது உலகளநதருளிய வாமனன படியையும், நிசாசரரைக் கவர்ந்த வெங்கணைக் காகுத்தன் படியையும் திருவரங்கனாரிடம் கண்ட அனுபவத்தைக் கூறுவது.

மூன்ரும் பாட்டு: "மநதிபாய் வடவேங்கடமாமலை வானவர்கள் சந்தி செய்ய நின்ருன் அரங்கத்தரவின் அணையான்" என்று திருவேங்கடமுடையானையும் பெரிய பெருமாளிடததிலேயே இவர் கண்டு அனுபவிக்கிறூர். முதல் பாசுரத்தில் "ஆதி" என இவனே ஜகத்காரணபூதன் என்றும், உலகைப படைக்கப் பிரமனைத் தோற்றுவித்த ஓர் எழில் உந்தியை உளத்தாற்கண்டு "உந்திமேலதன்ருே அடியேன் உள்

எத்து இன்னுயிரே" என்றும் போற்றுகின்றார். இவர் இங்கே தன்னை 'அடியேன்' என்கிறார். அவன் வடிவழகிந்குத் தோற்று! என்று ஆச்சான் பிள்ளையும் நாயனாரும் உரையிட்டுள்ளனர். 'பிள்ளை அழகிய மணவாளர அரையர் திருவரங்கனிடம் ஒரு தடவை திருமலைக்குப போய் வருகிறேன்' என்று விண்ணப்பிக்க, அரங்கனும், "ஒரு தரம் அமலனாதி பிரானை பாடி விட்டுப் போம்" என்று நியமிக்க அரையரும் அவ்வாறே செய்ததும், அரங்கனார் போம் அல்லது இரும்" என அருளிச் செய்தார என்றும ஓர் ஐதீகம் நாயனார் உரையிலுள்ளது.

நான்காம் பாட்டு: ஸ்ரீவைகுண்டநாதன் பெரிய பெருமாள் ஆனவாறே நித்ய சூரிகளும், வண்டுகளும் மயில்களும் ஆயினர்" என்பது பிள்ளையின் நயவுரை. மற்ற இருவர் வியாக்கியைகள் சற்று விரிவானது.

ஐந்தாம் பாட்டு "மிக்க கனமான மூட்டையைப்போல் வெகு காலமாகச் சேர்ந்துள்ள ஊன் பழவினையை யெல்லாம் நீறும்படி செய்து என்னைத் தனக்குரிய அடித்தொண்டன் ஆக்கினான் எம்பெருமான். மேலும் என்னுள்ளே புகுந்தான். இப்படி அவன் செய்ய யான் ஒரு நற்காரியமும் செய்திலேன். என்னைப் பெற, ஆற்றின் இடைக்குறையில் சயனித்து மாதவம் புரிந்தவன் போலும்" என அரங்கனாரின் பெருங்கருணைத் திறத்தில் ஈடுபடுகிறார் திருப்பாணர். இந்தப் பாட்டில் "என்னுள் புகுந்தான்" என்னும் தொடர் உயிர்நிலை போன்றது. இதற்கு மூன்று உரைகளும் ஊன்றி நோக்கி இன்புறத் தக்கவை.

ஆறும்பாட்டு: "அஞ்சிறைய வண்டுவாழ் பொழில் சூழ் அரங்கநகர் மேயவப்பன்" என்பதற்குப் "பெரிய பெருமாளுக்கு ஆபரணமாய் ஊருக்கும் ஆபரணமாயிருக்கும் சோலை சோலைக்கு ஆபரணமாயிருக்கும் வண்டுகள்; வண்டுகளுக்கு ஆபரணமாயிருக்கும் அழகிய சிறு கென்கை" என்பது நாயனார் உரை விளக்கம்.

ஏழாம் பாட்டு: "கையினார் சுரிசங்கு அனலாழியர்" என்பதற்கு வழங்கும் ஓர் ஐதிகம் குறிப்பிடத்தக்கது. "பெரிய பெருமாள் ஒரு கையால திருமுடியைக் காண்பித்தும் ஒரு கையால் திருவடியைச் சுட்டியும் சயனித்துள்ளார் அப்படியிருக்க, ஆழ்வார் பெருமாளை நான்கு திருக்கைகளை உடையவராகக் காண்பது ஏன்?" என்று அனந்தாழ்வான் பட்டரைக் கேட்டாராம். அதற்குப பட்டர் "பரமபதநாதன் இத்திருக்கரங்கள் உடையனாகில் பெரிய பெருமாளை போலே; என்று அருளிச் செய்தார் என்பது (பெரிய பெருமாள் மூலவர், பெருமாள் - உத்ஸவர்) பெரிய பெருமாள் திருக்கைகளில் ரேகை வடிவில் திருவாழ் திருச்சங்குகள் உள்ளன என்பது முனிவாகன போகத்தில் ஸ்ரீதேசிகன் நிர்வாகம்.

"செய்யவாய் ஐயோ! என்னைச் சிந்தை கவர்ந்ததுவே" என இப்பாட்டின் கடைசி அடியில் ஈடுபடுவது அவ் வாய்ப் புன்முறுவலின் அழகு தம் உள்ளத்தைக் கொள்ளை கொண்டமையை திருப்பாணர் தாம் முற்றும் அனுபவிக்க இயலாமையால் வருத்தமோ வியப்போ மேலிட்டு "ஐயோ!" என்கிறார் இது மற்றொரு சுவாரஸ்யம்.

எட்டாம் பாட்டு: திருவரங்கச் செல்வனாரது திருக்கண்களின் அழகினைப் பாண் பெருமாள் அனுபவிப்பதை விஷயமாகக் கொண்டது. எம்பெருமானது காதளவும் நீண்ட செவ்வரியோடிய கண்ணழகு நம்மை மயக்கிவிட்டதாய பாணனார் ஈடுபடுகின்றார்.

ஒன்பதாம் பாட்டு "ஆலமரத்தின் இலைமேல ஒரு பாலகனாய் ஞாலமேழும் உண்டான்" என்பதற்குச் "சிறு குழந்தைகள் தம் கண்முன் தென்படும் பொருள்களை எல்லாம் எடுத்து வாயிலே போட்டுக் கொள்வது போல, எம்பெருமானும் பாலகனானதற்கு ஏற்ப ஏழுலகையும் உண்டான்" என்பது பொருள். நீலத்திருமேனி ஐயோ நிறை கொண்டது என் நெஞ்சினையே" என்கிறார் இங்

## யாத்திரிகர்களுக்கு ஓர் அறிவிப்பு

புனித ஸ்தலமான திருமலைக்கு சிறப்பு நாட்களிலும், திருவிழா நாட்களிலும் யாத்திரிகர்கள் அதிக அளவில் வருகை தருவதால முதலில் வந்தவர்களுக்கு முதலில் எனும் முறைப்படி தங்கு வசதிகள் அளிக்கப்படும். அதாவது ஆனிவார ஆஸ்தானம், பவித்ரோத்ஸவம், ப்ரம்மோத்ஸவம், புஷ்பயாகம், வருடப்பிறபபு முதலான நாட்களில் முன்பதிவு ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது.

செயலாட்சித்தலைவர்.

கும் முன ஏழாம் பாட்டிலும் வரும் "ஐயோ" என்னும் சொல் பிரயோகம் ஆச்சரியமானது! "அச்சோ! ஐயோ! என்னே. எற்று! எவன் எனும் சொல் அதியசமுற இரங்கல்" என்பது சூடாமணி நிகண்டு. கம்பரும் அயோத்தியா காண்டம் கங்கைப் படலத்து முதற் பாட்டில் "ஐயோ! இவன் வடிவு என்பதோர் அழியா அழகுடையான் என்று இராமபிரான், வடிவழகில் ஈடுபடுவது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

பத்தாம் பாட்டு: "கோவலனாய் வெண்ணெய் உண்ட வாயன் என்பதில் ஈடுபட்டுப் பெரிய பெருமாள் திரு முகத்தில் வெண்ணெய் முடை நாற்றம் வீசும் என்று ஆழ்வார்களும் ஆசாரியர்களும் ஈடுபடுவார்கள்" என்று எம்பெருமான் தான் யசோதையின் அடிமை என்பதற்கு அடையாளமாகத் தம் அறையில் கண்ணி சிறுத் தாம்பினால் தான் கட்டுண்ட தழும்பைக் காண்பித்து, நம்மைத் தனக்கு அடிமையாக்கிக் கொள்கிறான்!! என்பது சுவையான அனுபவம். இப் பாசுரத்திற்கு நாயனார் அருளியுள்ள உரை அருமையும் பெருமையும் உடையது.

"அண்டர்கோன் அணியரங்கன் என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே!" என்று திருப்பாணாழ்வார் இப்பிரபந்தத்தினைத் தலைக்கட்டிப் பெரிய பெருமாள் திருமேனியில் மறைந்தருளினார். இவர் அருளிய பிரபந்தத்தின் உயர்வை ஸ்ரீவேதாந்த தேசிகன் "பாண் பெருமாள் அருள் செய்த பாடல் பத்தும் பழமறையின் பொருள் என்று பரவுகின்றோம்" எனப் போற்றுவது குறிப்பிடத்தக்கது.

# அரையர் சேவை

திரு. தி. சுரேஷ் - மதுரை.

அரையர் சேவை எனபது வைணவத் திருக்கோயில் களில் ஆழ்வார்களின் அருளிச் செயல்களை இசையுடன்பாடி அபிநயம் செய்து அழகுறப் பேசி நடிக்கும் ஒரு அபூர்வ கலையாகும். இதை நாலாயிர திவய பிரபந்த இலக்கிய விழா என்று கூறுவர். இக கலை நிகழ்த்துபவர்கள் 'விண ணப்பஞ் செய்வார்' 'நம்பாடு வான்' என்று கோயிலொழுகு குரு பரம்பரை போன்ற நூல்க ளும் கல்வெட்டுகளும் கூறுகின் றன.

அரையர் சேவை கொண்டாட் டம், பாசுரம் பாடுதல், அபிந யம் செய்தல், உரை கூறுதல் என்று 4 பிரிவுகளாக அமை யும். கொண்டாட்டம் என் பது இறைவன் புகழ் பாடு தல் என்பதாகும். இது "கண் ணும் மனமும் அழகிய பெரு மாள்" என்பது போன்ற பாசு ரங்களில் வரும் சொற்றொடர்க ளால் அமையும். பெருமாளை பாடும் கொண்டாட்டம் நாச்சி யார் என்றும் முடியும். அரை யர் சேவையில் சில பாசுரங் கள் உரையோடு வழஙகப்பெ றுவதுண்டு. அவ்வுரை 'தம்பி ரான்படி' என்று கூறப்படுகிறது. கோயிலொழுகு கூறும் வரலாற் றின் அடிப்படையில் இக்கலை வழிபாட்டு விழா தோன்றிய காலம் திருமங்கை ஆழ்வார் காலம் (கி.பி. 8ம் நூற்றாண்டு ஆகும்.

நாதமுனிகள் இதனைத் தோற்றுவித்தவர் என்பதை வைணவ குரு பரம்பரை நூல கள் கூறுகின்றன. மார்கழி மாதம் அமாவாசை நாளுக்கு மறுநாள் பிரதமை முதல் தசமி முடிய 10 நாட்களில் முதலாயி ரம் பெரிய திருமொழி, திருநெ டுந்தாண்டகம் ஆகியவறறை பண்ணுடன் பாடி, அபிநயக்கும் மரபினை நாதமுனிகள தோற் றுவித்தார. 10 நாட்கள் பகல் வேளையில் நடைபெறுவதால் இவ்விழா பகல் பத்து என வும், திருமொழி திருநாள் என வும் அழைக்கப்படுகிறது. மார் கழி மாதம் ஏகாதசி (11)ம் நாள் முதல் உள்ள 10 நாட்க ளில் நம்மாழ்வார் திருவாய்மொ ழியை பணணுடன் பாடி அபி நயக்கும் மரபினையும் நாதமு னிகளே நடைபெறச் செய்தார். 10 நாட்கள் இரவில் நடபப தால் இராப்பத்து எனவும திரு வாய்மொழி திருநாள் எனவும பெயர் பெற்றது. இவ்வாறு 20 நாட்கள் நடக்கும் இவவிழாவை வைணவர்கள் 'அத்தியயன உற் சவம்' என்றும் கூறுவர்.

உற்சவரின் முன்பு மட்டுமே அரையர் சேவை நடைபெறும். அப்போது பெருமாளுடன் ஆழ் வாரகள் அனைவரும் எழுந்த ருளி இருப்பர். ஒரு காலததில் தமிழக வைணவ கோயில் கள் அனைத்திலும் நடைபெற்ற இவவிழா இப்பொழுது ஸ்ரீவில லிப்புத்தூர், ஸ்ரீரங்கம், ஆழ் வார்திருநகரி ஆகிய மூனறு இடங்களில் மட்டுமே நடைபெ றுகிறது. மைசூரில் உள்ள மேல கோட்டையில் அரையர் இசை யுடன் பாடுவது மட்டுமுணடு. அபிநயம் இல்லை. அரையர பாசுரங்களை உணர்ச்சியோடு பாடி அபிநயம் செய்வர். அப் போது அவர் தம்மை ஆழ் வாரகவே கருதுவர். தாய், தோழி முதலியர் கூறுாக வரும் துறைப் பாசுரங்களில



அண்மையில் ஆந்திரமாநில உயர்நீதிமன்ற தலைமை நீதிபதி திரு. பானர்ஜி அவர்கள் திருமலைக்கு வருகை தந்தபோது

அரையரே அந்தந்த மாந்தரோடும், நிகழ்ச்சிகளோடும் மனம், மொழி, மெய்யால் ஒன்றி விடுவர்.

இச்சேவைக்காக தனியே ஒப்பனை, உடை ஏதும் அணிவதில்லை. கூம்பு வடிவிலான குல்லாய் ஒன்றை தலையில் அணிகிறுர்கள். இறைவன் சூடிக்களைந்த இரு மாலைகளையும் அணிவர். அரையர் தம் கைகளில் இரு தாளங்களை வைத்துள்ளனர். தாளத்தை ஆழ்வார் என்றே அழைப்பர். இத்தாளம் வடிவில் பெரியது. இந்த அரையர் சேவையில் துணை இசைக்கருவிகள் கிடையாது. பள்ளுப்பாட்டு பாடும் போது மட்டும் அரையர் மிருதங்கத்தை பயன்படுத்துவர்.

அரையர் சேவையில் பாசுரத்திற்கு மட்டுமே அபிநயம் உண்டு. ஆனால் முத்துக்குறி நிகழ்ச்சியில் மட்டும் பாசுரத்துடன் உரைக்கும் அபிநயம் உண்டு. திருமங்கை ஆழ்வாரின் திருநெடுந்தாண்டக பாசுரத்தை பாடும் நிகழ்ச்சி முத்துக்குறி. இதுபோது அரையர் குறத்தியாக வேடமிட்டு முத்துக்குறி பார்ப்பர். இது பகல் பத்தின் 9ஆம் நாள் ஸ்ரீரங்கத்திலும் 10ம் நாளில் ஆழ்வார் திருநகர், ஸ்ரீவில்லிப்புத்தூர் ஆகிய தலங்களில் நிகழ்கின்றன. ஸ்ரீவில்லிபுத்தூரில் மட்டும் முத்துக்குறி மூன்று பிரிவுகளாக ஆடி மாதம் தேர் திருவிழாவில் தேர்நிலைக்கு வந்த மறுநாளும், மார்கழி அத்யயன உற்சவ பகல் பத்தின் இறுதி நாளிலும் தைப் பொங்கலுக்கு மறுநாளும் நடைபெறுகிறது.

அரையர் சேவையில் பள்ளுப் பாட்டு பாடும் வழக்கம் உள்ளது. இன்றும் இவ்விழா நடைபெறும் மூன்று இடங்களிலும் இப்பள்ளுப் பாட்டு படியேற்றம், திருமுடிச்சேவை திருவூரல் ஆகிய நிலைகளில் விழாக்காலங்களில் பாடப்படுகின்றன. இப்பள்ளுப் பாட்டிற்கும் தமிழ் இலக்கிய வகைகள் ஒன்றுன பள்ளு இலக்கியத்திற்கும் எவ்வித தொடர்பும் இல்லை. வைணவர்கள் இதை மிக புனிதமும் தூய்மையாகவும் கருதுவதால் பெண்களுக்கு இதில் பயிற்சி அளிப்பதில்லை. அரையர்களுக்கு முற்காலத்தில் மன்னர்கள் மானியமாக நிலங்கள் அளித்த செய்தியை கல்வெட்டுக்கள் கூறுகின்றன. இப்போது அரசு மான்யங்கள் வழங்கி ஆதரித்து வருகிறது.

குறிப்பு: வாழ்வியற் கலைக்களஞ்சியத்திலிருந்து தொகுக்கப்பட்டது.



## திருமலைக்கு நடந்துவரும் யாத்திரிகர்களுக்கான வசதிகள்

தங்களுடைய வேண்டுதல்களில் ஒன்றுக பலர் திருமலைக்கு நடந்து வருகின்றனர். தி.தி. தேவஸ்தானம் அவர்களுக்காகக் கீழ்வரும் வசதிகள் செய்து உள்ளது.

* யாத்திரிகர்களின் சாமான்கள் இலவசமாக திருப்பதியிலிருந்து திருமலைக்கு எடுத்துச் செல்லப்படும். திருப்பதியிலுள்ள தி.தி. தேவஸ்தான சத்திரங்களில் ஏதாவது ஒன்றில் அல்லது அலிபிரி சாவடியில் (டோல்கேட்) தங்கள் சாமான்களை ஒப்படைத்து, அங்குத் தரப்படும் தங்கள் சாமான்களுக்கான டோக்கனை திருமலையில் 'மத்திய வரவேற்பு நிலையத்தில் காட்டுவார்களாயின், அங்கு அவர்களுடைய சாமான்கள் அவர்களுக்கு ஒப்படைக்கப்படும்.
* காளி கோபுரம், சித்தியேகாடு, மாமண்டூரு மிட்டா, நரசிம்மசுவாமி கோயில், மோகால மிட்டா மற்றும் பல இடங்களில் யாத்திரிகர்கள் சமையல் செய்துகொள்ள வசதிகள் உள்ளன.
* நடைபாதையின் 7வது மைலில் மாமண்டூரு மிட்டாவில் தாங்களே முன்வந்து நடத்தும் 'இஸ்கான்' எனும் தனியார் அமைப்பு நடத்தும் உணவு விடுதியில் சுகாதாரமான உணவு வகைகள் கிடைக்கும்.
* மறைவிடங்கள் உள்ளன. ஓய்வு எடுத்துக்கொள்ள முக்கியமான இடங்களில் நிழற்குடைகள் உள்ளன.
* திருமலைக்குச் செல்லும் வழியில் யாத்திரிகர்களை களவு, ஏமாற்றுதல் போன்றவற்றிலிருந்து பாதுகாக்கும் பொருட்டு வழிநெடுகிலும் காவல்துறை, கூர்க்கா, பாதுகாப்புத்துறை ஆகியோரைச் சார்ந்த பகல் இரவு நேர ரோந்து ஏற்பாடுகள் உண்டு.

# திருமங்கை ஆழ்வார்

திரு. வளவ. துரையன் - கிருட்டினாபுரம்.

திருமால் எழுந்தருளியுள்ள 108 திவ்ய தேசங்களில் ஏறக்குறைய 86 தேசங்களை மங்களாசாசனம் செய்து அனுபவித்தவர் திருமங்கையாழ்வார்.

ஆசுகவி, மதுரகவி, சித்திரக்கவி, வித்தாரக்கவி என்னும் நான்குவிதமான கவிகள் புனைவதிலும் வல்லவராகத் திகழ்ந்ததால் அவர் "நாலுகவிப்பெருமாள்" என்று அழைக்கப்பட்டார்.

மேலும் ஆழ்வார் பெருமக்கள் அருளிச்செய்த நாலாயிரத்தில் மூன்றில் ஒரு பங்கிற்கு மேலாக மிக அதிகமான பாசுரங்களைப் பாடியவரும் இவரே ஆவார்.

திருமங்கை ஆழ்வார் சோழ நாட்டில் கள்ளர் மரபில் ஆலிநாடுடையார்க்கும் அவரது மனைவியாகிய வல்லித்திரு அம்மையார்க்கும் மகனாக கலி 398 நளஆண்டு கார்த்திகை மாதம் பௌர்ணமியன்று கார்த்திகை நட்சத்திரத்தில் அவதரித்தார்.

இவர் வீரத்தைப் பாராட்டி சோழமன்னர் "பரகாலன்" எனும் பட்டம் அளித்ததோடு ஆலி நாட்டிற்கு அரசனாக்கினான். ஒருமுறை இவர் திருநாங்கூர் மருத்துவர் ஒருவரின் இல்லத்திற்குச் சென்றார். அம்மருத்துவரின் பெண்ணைக் கண்டு மணம் செய்துகொள்ள விருப்பம் தெரிவித்தார். அப்பெண் தேவமகளிரைச் சேர்ந்தவள் ஆவாள். திருநாங்கூர்க் குளத்தில் நீராட தேவமகளிர் வந்தனர். இப்பெண் குமுத மலர் கொய்து கொண்டிருந்ததைப் பாராமல் இவளை விட்டு விட்டுப் பிறர் சென்று விட்டனர்.

தனியே விடப்பட்ட அப்பெண்ணுக்கு குமுதவல்லி எனப் பெயரிட்டு மருத்துவர் வளர்த்து வந்தார். மருத்துவர் மங்கைமன்னரின் விருப்பத்தை வளர்ப்புப் பெண்ணிடம் தெரிவித்தார்.



அவளோ, "திருஇலச்சினையும் திருநாமமும் உள்ளவர்க்கு அன்றி மற்றவர்க்கு என்னைப்பேச விடேன்" என்றாள். உடனே திருமங்கைமன்னர் திருநறையூர் நம்பியிடம் சென்று திருஇலச்சினையும் பன்னிரண்டு திருநாமங்களும் சார்த்திக்கொண்டு வந்தார்.

பிறகும் குமுதவல்லியார், "நாள்தோறும் 1008 ஸ்ரீவைஷ்ணவர்க்கு அமுது செய்விக்கவேண்டும். இவ்வாறு ஓர் ஆண்டு முழுவதும் நடாத்த வேண்டும்" என்று சொல்ல அதற்கும் மங்கைமன்னர் இசைந்தார்.

இருவர்க்கும் மணம் நடந்தேறியது. ஸ்ரீவைணவர்க்கு நாள்தோறும் அமுது செய்விப்பதில் பெரும்பொருள் செலவாகியது. மன்னனுக்குத் திறைப் பணம் கட்ட முடியவில்லை. எனவே மங்கை மன்னர் சோழ மன்னனால் சிறைப்பிடிக்கப்பட்டார். எம்பெருமான் அருளால் காஞ்சியில் பொருள் கிடைக்க அதை மன்னனிடம் கொடுக்க சோழ மன்னன் வியப்புற்று விடுவித்தான். மீண்டும் பணம் முழுவதும் செலவழித்து அடியார்களுக்கு அமுது செய்வித்தார். பணம் இல்லாதபொழுது வழிப்பறி செய்யத் தொடங்கினார். அப்பொருளால் வைணவர்க்கு அமுது செய்ய ஆரம்பித்தார்.

இவரைத் திருத்த எம்பெருமானும் பிராட்டியும் திருமணக் கொல்லை எனும் ஊரில் இவர் முன் மணக்கோலத்தில் வந்தனர். அவர்களிடமும் மங்கைமன்னர் கொள்ளையடித்தார். எல்லா அணிகலனையும் வாங்கியபின் பெருமானின் திருவடியில் இருந்த அறுகாழி மோதிரத்தை வாயால் கடித்து வாங்கிய மங்கை மன்னரைக் கண்டு நம் கலியனோ எனப் பெருமாள் அருளினார்.

எல்லாப் பொருள்களையும் சுமையாகக் கட்டித் தூகக முயன்ற மங்கைமன்னரால் அதைத் தூக்க முடியவில்லை. மணக்கோலத்தில் இருந்த பிரானிடம் "நீர் மந்திரம் செய்தீர்" என்று சினந்தார். "ஆம்" என்ற பெருமாள் "அம்மந்திரத்தை உனக்குச் சொல்கிறோம்" என்றார்.

"உடன்நீர் எனக்குச் சொல்லாவிடில் என்வாளுக்கு இரையாவீர்" என்று மங்கைமன்னர் வாளை உறுவி அதிகாரத்துடன் கேட்டார். எம்பெருமானும் மங்கைமன்னர் கழுத்தைச் சேர்த்தணைத்து அவர் காதில் எட்டு எழுத்தாய் மூன்று பதமாய் விளங்கும் "ஓம் நமோ நாராயணாய" எனும் திருமந்திரத்தைச் செவிச்சார்த்தியருளினார்.

மங்கைமன்னர் இது காதில கேட்டதும் ஞானம் பெறறார். திருமந்திரத்தின் உள்ளீடான பெருமாளின் வடிவத்தையும் அருள்மாரி எனும் பெரிய பிராட்டிய்ருளாலே கண்டு களித்தார்.

இந்த அனுபவத்தின் விளைவாக வாடினேன்; வாடி, வருந்தினேன் மனத்தால்" என்று தொடங்கிப் பத்துப் பாசுரங்களால் முதல் திருமொழியை முடித்தார்.

பிறகு பெரிய திருமொழி, திருக்குறுநதாணடகம், திருநெடுநதாண்டகம், திருவெழுகூறறிருக்கை, சிறிய திருமடல, பெரிய திருமடல் எனகிற பிரபநதஙகளையும் திருமஙகை ஆழ்வார அருளிசசெயதார்.

திருககுறுஙகுடியில் தம் துணைவி குமுதவலலியாரோடு தங்கிய திருமங்கையாழ்வார தம் இறுதிக்காலத்தைக் கழித்தார். பெருமாளின் வடிவழகை அனுபவித்துக்கொண்டு அங்கேயே திருநாட்டுக்கு எழுநதருளினார். ✱

## தீபாவளி இதுதான்....

'தீபாவளி' என்றதும் நமக்கு நரகாசுரன் நினைவுதான் வரும். நரகாசுரனை கண்ணன் வதம் செய்தார். நரகாசுரனின் விருப்பத்தைப் பூர்த்தி செய்து கண்ணன் அருள் பாலிக்க, நாம் தீபாவளி கொண்டாடுகிறோம். முன்னாளில், அரக்கர்கள் பார்க்க பயங்கர உருவத்தில் இருநதனர். உதாரணத்திற்கு, இரண்யாட்சன், இரண்ய கசிபு, நரகாசுரன், இராவணன், கும்பகர்ணன் என்று பலர். இவர்களை, வராக, நரஸிம்ஹ, கிருஷ்ண, இராம அவதாரங்களில் திருமால் அழித்தது நாம் அறிந்த கதைகள்.

இப்போது நாம் உருவத்தில் அரக்கராக இல்லை. அழகிய மனிதர்களாக இருக்கிறோம். ஆனால் உள்ளத்தில்? அழுக்காறு, அவா, இன்னாச்சொல், கோபம், ஆத்திரம், ஆவேசம் என பலப்பல மோசமான குணங்கள் நிரம்பிய மனித உருவில் உள்ள அரக்கர்களாக இருக்கிறோம். இந்த அரக்கர்களை அழிக்கமுடியுமா? பிரதிதினமும் இறைவன் திருநாமத்தைப் பாடியும், ஜபித்தும், ஆலயங்களுக்குச் சென்று அபிஷேகம், ஆராதனை பிரதட்சண நமஸ்காரங்கள் என செய்து நம் பாவத்தைப் போக்க முயற்சிக்க வேண்டும்.

நம் குணங்களை நாம் தான் நல்லபடி வளர்த்துக்கொள்ள வேண்டும். இனிய சொல், பெருந்தன்மை, விட்டுக்கொடுக்கும் மனப்பான்மை, இரக்கம், பாசம், அன்பு, அறம், ஞாயம், தர்மம், நேர்மை எனப்பலப்பல நற்குணங்களை படிப்படியாக வளர்த்துக் கொள்ள வேண்டும். இப்படியாக படிப்படியாக நற்பண்புகள் நமக்கு வர, வர அரக்க குணம் மறையும். நம் மனமாகிய தேரை, நம்புத்தியாகிய சாரதியைக் கொண்டு செலுத்த வேண்டும். இறைவனின் கருணை நமக்குக் கண்டிப்பாக கிடைக்கும்.

பெற்ற தாய் தந்தையரைப் பேணிக்காத்தல், அனைவரிடமும் மரியாதையோடு அன்போடு பழகுதல், நம் தவறை யாரேனும் சுட்டிக்காட்டினால் பொறுமையாக அதனைத் திருத்த முயற்சிதல் இப்படியாக நற்குணங்களின் குன்றேறி நிற்க வேண்டும். நம் மனத்தில் உள்ள இருள், பாலம் என்ற நரகாசுரனை இந்தத் தீபாவளி நன்னாளில், பக்தி, புண்ணியம் என்ற கிருஷ்ணனைக் கொண்டு அழிப்போம். இதுதான் உண்மையான தீபாபவளியாகும்.

திருமதி. வஸந்தா வேணுகோபால் - சென்னை.

# "திருமகளாரும் திருப்பாவையும்"

திரு. வி. சக்திவேல் - தென்புத்தூர்.

ஸ்ரீமிகு வில்லிபுத்தூரில் பெரியாழ்வாரின் வளர்ப்பு மகளாகத் தோன்றியவள் கோதை என்கிற ஆண் டால். ஆண்டாள் அருளிய திருப்பாவை பாடல்கள் மார் கழி மாதத்தில் பக்தி பர வசத்தோடு பாடக்கூடியவை. மார்கழி மாதங்களில் வை கறைப் பொழுதில் இறைவனை துதித்து வணங்கும் அழகினை நாம் காண்கின்றோம்.

இறைவனுக்கு அடிமை செய் வதை காட்டிலும் அவன அடியார்களுக்கு ஆட்படுவதே சாலசசிறந்தது என்று காட்டு கிறார்கள் ஆழ்வார்கள். பாகவ தர்களுக்கு அடிமைப்பட்ட 'பக வத் சேஷத்துவமே' சொரூபம். இதுவே நாம் பெறும் பேறு. 'எம்மா, ஒழிவில், நெடு, வேய்' என்கிற நான்கு பதிகஙகள மூலம் பேற்றை தெரிவிக்கிறார் நம்மாழவார் என்கிறார் நாய னாா. ஆழவார் அடியார்கள் திறத்து ஈடுபட்டு, அனுபவிக் கிற ஆனந்தத்தின் எல்லை நிலம்தான் "நெடுமாற்கடிமை" எனகிற பதிகம். இப்பதிகத்தில ஆரமப பாசுரததில் "கொடுமா வினையேன்" எனறு தனனைச் சொலலிக கொளளுகிறார் ஆழ வாா.



பதது பாசுரங்கள் கொண் டது. ஒருபதிகம். இப்படி பதது பதிகங்களை கொண்டது ஒருபதது. எட்டாம் பத்து கடைசிப்பதிகம. நெடுமாறக டிமை என்கிற பதிகம். கிட் டத்தட்ட எண்ணூறு பாசுரங் கள கழித்து இவ்வனுபவத்தை ஆழ்வார் பெறுகிறார். முதல் பாசுரத்திலேயே இதனைப் பெற வில்லையே எடுத்த எடுப்பிலே எனக்கு இதனை எம்பெருமான் காட்டித்தரவில்லையே என்று நினைத்து ஏங்கி, நான் மிகுந்த பாவங்களைச் செய்த பெரும் பாவி என்று தன்னை நொந்து, 'கொடுமா வினையேன்' என்று அழைத்துக கொள்ளுகிறாா ஆழ்வார் என்று இரண்டாவது பொருள் தருகிறார் நஞ்சீயர். 'கொடுமா வினையேன்' என்று நொந்து எண்ணூறு பாசுரங் கள் கழித்து, அடியார்கள் திறத் தில் ஈடுபட்டு ஆழ்வார் அனுபவித்த அவ்வானந்தத்தை முதல் பாசுரத்திலேயே 'செல்வச் சிறுமீர்காள்' என்று அழைத்துப் பெற்று விடுகிறாள் ஆண்டாள். இவள் தந்தை பெரியாழ்வார் 'அடியோமோடும் நின்னோடும்'

என்று அடியவர்களுக்குப் பல் லாண்டு பாடி, பின் எம்பெருமா னுக்கு பல்லாண்டு பாடினார்.

இதை உணர்ந்து, 'செல்வச் சிறுமீர்காள்' என்று அடியார களை முதலில் அழைத்து 'நந் தகோபன்குமரன்' என்று பின் அவனைப் பேசினாள் ஆண டாள். தந்தை வழிச்சென்று அனுபவத்தை எளிதில் பெற்று ஆழ்வாரையும் விஞ்சி நிற்கின் ருள் ஆண்டாள்.

எவன் ஒருவன் உல கத்து பொருள்களில் எல்லாம் நிறைந்து அவ்வுலக உயிர் களை எல்லாம் நிறைந்து அவ்வுலக உயிர்களில் எல்லாம் இயக்குபவனாக இருக்கிருனோ அந்த மகாபுருஷன் தமக் குள்ளே புகுந்து ஆவேசமாய் பாடி இருக்கிருன் என்று ஆழ் வார் கூறுகிருர். அவன் இவ ருக்குள்ளே கலந்து இவர் வேறு அவர் வேறு என்றில்லாமல் ஒன் ருகி உள்ளவிதத்தையும் அழகாக விளக்குகிருர்.

"தேனேபாலே கன்னலே அமுதே
திருமாலிருஞ்சோலைக்
கோனேயாகி நின் தொழிந்தான்
என்னை முற்றும் உயிர்உண்டே"

என்கிருர்.

பெரியாழ்வார் பெற்றெடுத்த பிள்ளையாயிற்றே கோதை என் கிற ஆணடாள் இவள் செய்த தமிழ்மாலை நாறுந றும் பொழில்சூழ் எனும் படிக கும் சற்று மிகுதியெனவே பாம ணம் பரப்பியது என்ருல் அது மிகமையாகாது எனலாம்.

மார்கழி திங்கள் தொடங்கி 'மாயனை மன்னு வடமதுரை' ஈருக ஐந்து பாசுரங்களில் தம் அனுபவார்த்தங்களை விளக்கி னாள். அதாவது முதல் பாசு ரத்தில்.

"நாராயணனே நமக்கே பறை
தருவான்"

என்று நாராயண பரதது வத்தை விளக்கினாள்.

பிஞ்சிலே பழுத்தல் என்பதை வெம்பல் என்று நங்கள் கருதக் கூடாது. பிஞ்சிலே பழுத்தல் வேறு, வெம்பல் வேறு சுவை குன்றி மணம் குன்ற விரும் பத்தகாத நிலையை அடை வதைத் தான் வெம்பல் என் பார்கள். திருத்துழாய் (துளசி) எப்படி முளைக்கும்போதே நல்ல மணத்தோடு எழுமோ. அதைப் போல் தோன்றியவள் ஆண் டாள். பக்தி மணம் கமழ விளங்கியவள். பிஞ்சாய்ப் பழுத் ததினால் ஆண்டாள் மானி டர் எவரையும் மணுளனாக அடையவிரும்பவில்லை. திருமா லையே மணவாளனாக வரித் தாள். மணம் கொண்டாள்.

மணவாள மாமுனிகள் அஞ்சு குடிக்கொரு சந்ததி என்ற அடை மொழி கொடுத்து ஆண்டா ளைப் புகழ்கின்ருர். இறைவ னிடத்தில் பரிவு கொண்டு பரி வின் மிகுதியால் அவனுக்கு எப்போது என்ன நேருமோ என்று அச்சமுற்று இருக்கும குடிஅஞ்சும் குடி எனபார கள். மிகுந்த பரிவைக் காட்டும இந்த சொல்லை உபயோகித துப் பொங்கும் பரிவால் பட டர்பிரான் பெரியாழ்வார் எனப பெயர்பெற்ருர். அவருடைய வளரப்புத "திருமகளார" ஆண் டாள் பகவானிடத்தில் மிகுநத பரிவு மட்டுமின்றி அவனை அடையும் நோக்கையும் பெற்று பெரியாழ்வாரையும் விஞ்சியும நின்றவள் ஆண்டாள்.

பிஞ்சுப் பிராயம் முதலே தனக்கு இப்படிப்பட்ட பக்தி பெருக்கு இல்லையே. ஆண்டா ளைப்போல என்று ஆதங்கப் படுகிருள திருக்கோளூர் பெண பிள்ளை. இதன் விளைவாக ஏக்கத்தோடு பிஞ்சாய்ப் பழுத் தேனோ ஆண்டாளைப்போல எனகிருள் எம்பெருமானிடம்.

பததுடை அடியவர்க்கு எளி யவன் பிறரகளுக்கு அரியவித் தகன் மலர்மகள் விரும்பும் நம் அருள் பேறல் அடிகள் என்கிருர் நம்மாழ்வார். பத்துடை அடிய வரை நோக்குங்கால் மலர் மகளுககும், அரியவன் ஆகி ருன். எம்பெருமான். சீதை யாக அவதரித்தவள் மலர்மகள். அசோக வனத்திலே இச்சீதை கனவு காணவில்லை. 'கனாக் கண்டேன் தோழிநான்' என்று செல்லும்படி கனவு கண்டவள் ஆண்டாள்.

திருப்பாவையில் தேவாதிதே வன், பரமன், உத்தமன், மாத வன், வைகுந்தன் என்று இப் படி அவனுடைய திருப் பெயர்களால் தத்துவத்தையும் கர்ம, ஞான, பக்தி, பிரபத் திகளெல்லாம் நமது சொருபத் திற்குச் சேரசெய்ய வேண்டி யவைகளே ஆயினும் பலன ளிப்பவன் இறைவன் நாரா யணனே, நமக்கே பறைதரு வான்" "இறைவா நீ தாராய் பறை" என்று ஹிதத்தை யும் "எற்றைககும் ஏழேழ்பிறவிக் கும் உனதன்னோடு உற்ருேமே யேவோம் உமக்கேயாம் ஆட் செய்வோம்" பகவானை விட்டு பிரியாமல் இருந்து அவன் உகப் புக்காகத் தொண்டு செய்வதே மேலான பலன் என்று புரு ஷார்த்தத்தையும் அருளிச் செய் துள்ளாள். இத்தகைய கார ணங்களால் கீதையினும் மேம்

பட்டது திருப்பாவை என்பதை அறியலாம்.

பண்டிகை திருமண காலங்களில் பெரியோர்களை எல்லோரும் சேவிப்பார்கள். முதலில் கணவன் கால்தொட்டால் கடைசியில் மாதவனைக் கேசவனை என்று முடிதொடுகிறாள் ஆண்டாள். அடிதொழுகிற ஆண்டாளின் கனவிலே தன்னைக்காட்டி அருளினான். அடியவர்களுக்கு எளியவனான எம்பெருமான் சீதைக்கு தன்னைச் காட்டாமல் இருந்துவிட்டான். மலர்மகள் விரும்பும் அரும் பெறல் அடிகள் ஆண்டாளுக்கு 'அடிதொழ' கற்றுக்கொடுத்தவர் தந்தை பெரியாழ்வார.

இது அறிந்து ஆண்டாள் இரண்டாம் பாட்டிலே 'அடிபாடி'' என்று அவன் திருவடி வணங்குகிறாள். பெரியாழ்வார் பின் தொடர்ந்து பெரியபிராட்டிக்கும் கிட்டாத பாக்கியத்தையும் பெற்று பெருமை பெருகிறாள் ஆண்டாள். கிருஷ்ணவதாரத்தில் ஈடுபட்டவர நம்மாழ்வார் இவரைப்போலவே அதே அவதாரத்தில் தன்னை ஈடுபடுத்தியவர் பெரியாழ்வார். இவர நீராடிய துறையிலேயே நீராடுபவள் ஆண்டாள்.

தென்திசையில் பிறந்து வடதிசையை நினைந்து இருந்தவர் நாதமுனிகள் யமுனைத் துறைவன் என்று தன் பேரனுக்கு பெயர் இட ஆசைப்பட்டவர். இவர் இளமையில் யமுனைதுறைவன் அவரே முதுமையில ஆளவந்தார. ஆண்டாளை தனியாக அனுபவிக்காமல் ஆழ்வார் "திருமகளார்" ஆண்டாள் பெரியாழ்வார் பெணபிள்ளையாய் ஆண்டாள் பிறந்த திருவாடிப்பூரம் என்று சேர்த்து அனுபவிக்கிறார மணவாள மாமுனிகள்.

வைணவர்களாகிய நாம் மாரகழிதிங்களில் தூய்மையாய் இருந்து வைகறைப்பொழுதில் நாராயணனையும் ஆண்டாள் அம்மையாரையும் மனதினால் சிந்தித்து திருப்பாவை பாசுரங்களை பாடி வழிபட்டாள் பாரோர் புகழ நாராயணன் நமக்குப் பறைதருவான்.



# முப்பத்து மூன்று கோடி தேவர்கள்

பிரம்மதேவர் தாவரங்களைப் படைத்தபின்பு விலங்குகளைப் படைத்தார். இதை விடச் சிறப்பான சிருஷ்டியைச் செய்ய வேண்டும் என்று சிந்தித்தார். பிரம்மனின் சரீரத்திலிருந்து சத்வ குணமுடையவரும் சுகானுபவமும் ஆனந்தமும் ஆன்ம ஞானமும் விவேகமும் உள்ளவராயும் நித்ய சந்தோஷமுடையவர்களான தேவர்கள் உதித்தார்கள்.

இவர்கள் கண் இமைக்கமாட்டார்கள். காலால் பூமியைத் தீண்ட மாட்டார்கள். இவர்கள் கடமை பூமியில் உள்ள மனிதர்களிடமிருந்து யாகங்களின் மூலம் ஹவிஸ் பெற்றுக் கொண்டு அவர்கட்கு எப்போதும் உதவுவதே. இவர்கட்கு எப்போதும் சந்துஷ்டியே இவர்கள் பகலில் பலவாயினர். இவர்கட்குப் பிரம்மா பெயர்களைக் கொடுத்தார். இவர்களது தலைவன் இந்திரன். துர்வாசனின் சாபத்தால் செல்வத்தை இழந்த தேவேந்திரன் பிரம்மனை அழைத்துக்கொண்டு பகவானைத் துதித்துத் திருப்பாற்கடலைக் கடைந்து காமதேனு, பாரிஜாத விருட்சம், அப்சர ஸ்திரீகள், சந்திரன், ஆலகாலவிஷம், அமிர்தகலசம் சுமந்த தன்வந்திரியும் தோன்றினர். தேவர்கட்கு இவைகளை பகவான் அருளினார். இவர்களது உலகம் சுவர்லோகம் ஆகும். உலகங்களில் இது பத்தாவது ஆகும். பன்னிரு ஆதித்யர்களும் பதினொரு ருத்திரர்களும் எட்டு வசுக்களும் அஸ்வினி தேவர்கள் இருவரும் ஆக முப்பத்துமூன்று முக்கியமான தேவர்கள்.

இவர்கள் எம்பெருமானுடைய சங்கல்ப காரியத்தை நிறைவேற்றும் அதிகார புருஷர்கள் ஆவார்கள். கல்பாதி காலத்தில் பிரம்மாவின் சரீரத்திலிருந்து தோன்றிய 33 கோடி தேவர்களும் ஒவ்வொரு மனுவந்தரத்திலும் பிறந்து கொண்டே வருவார்கள். இவர்கள் சுய இச்சைப்படி பிறப்பார்கள். போகப்பிரியர்கள். அதிதிக்கு தேவர்களும் திதிக்கு அசுரர்களும் பிறந்தமையால் தேவர்களும் அசுரர்களும் ஒருவகையில் சகோதரர்களே. ஒருமுறை தேவர்கட்கும் அசுரர்கட்கும் ஒரு போட்டி வைக்கப் பட்டது. அனைவர்க்கும் முன்னால் விருந்து உணவு பரிமாறப்பட்டது. ஆனால் அவர்கள் தங்கள் கைகளினால் உணவை எடுத்து உண்ணுமலேயே பசியாற வேண்டும் என்று நிபந்தனை விதிக்கப்பட்டது. அசுரர்கள் திகைத்தனர். ஆனால் தேவர்கள் என்ன செய்தனர் தெரியுமா? தன் இலையிலிருந்த உணவை ஒருவர் மற்றொருவர்க்கு எடுத்து ஊட்டி விட்டுப் பசி ஆறினர். பகவத் கீதையில் கர்ம யோகத்தில் 11, 12-ஆம் ஸ்லோகங்களில் "யக்ஞத்தால் தேவர்களைப்பேணுங்கள். தேவர்கள் உங்களைப் பேணட்டும். ஒருவரை ஒருவர் பேணிப் பெருநன்மை எய்துங்கள்" என்று மனிதருக்குச் சொல்லப்பட்டுள்ளது.

திருமதி. ராஜலெக்ஷ்மி - கைலாசபுரம்.

# அசுரர்கள்

ஸ்ரீமஹாவிஷ்ணுவின் மக்களே மதுகைடபாள் என்ற உலகத்தின் முதல் அசுரர்கள். இவர்கள் தங்கள் சகோதரரான பிரம்மாவின் நான்கு வேதங்களைப் பிடுங்கி கடலடியில ஒளித்து வைததுப பின்னால் பகவானால் தண்டிக்கப்பட்டனர்.

ஜெய-விஜயாள் என்ற இரு துவாரபாலகர்கள் சாபம் பெற்று பூமியில் வந்து இரண்யகசிபு இரணியாட்சன், இராவணன்-கும்பகர்ணன், சிசுபாலன்-தந்தவிக்ரன் என்ற அசுரரகளாக முறையே க்ருதயுகம், திரேதாயுகம், த்பவாபரயுகங்களில் தோன்றி ஸ்ரீவராக, நரசிமம, ஸ்ரீராமலக்ஷ்மண, ஸ்ரீக்ருஷ்ணர் முதலியோரால் சங்கரிக்கப்படடனர்.

இரண்யாட்சனின் மனைவி உதயடானு. இவர்கள் பிள்ளைகள் சகுனி (மகாபாரத சகுனி அல்ல) சந்திரன், திருஷ்டன், பூதசந்தாலன. விருசன், காலநாபன், மகாநாபன, அரிஸமசுரு, உதகேசன ஆவர்.

இரண்ய கசிபுவின் மனைவி இவர்கள் பிள்ளைகள் அனகிலாதன, ஹ்லாதன, பிரகலாதன, சம்கிலாதன் முதலிய நால்வர். பிரகலாதனின் பிள்ளைகள் சிபி, பாஷ்கலி, விரோசு விரோசனின் பிள்ளை பலிச் சக்ரவர்த்தி.

இரண்யகசிபுவின் சகோதரி சிம்ஹிஹை இவளுக்கும் விப்ரசித்தி என்பவனுக்கும் 10 குழந்தைகள் அவர்களில் ஒருவரே ராகு என்ற அசுரர்களின் பிதாமகர். இவர் அசுரராக இருந்தும் மோகினியாக அவதாரம் செய்த பகவான தேவர்களுக்கு அமிர்தம் பங்களித்தபோது சூரிய சந்திரருக்கு இடையே அமர்ந்து அதை அருந்தி நவகிரகங்களில் ஒருவரானவர்.

இராகுவின் மகளை சந்திரவம்சத்து வநத ஆயுசு என்பவன் மணந்து நகுஷன் முதலிய ஐந்து குழந்தைகளைப் பெற்றனர். நகுஷ்ன் வழியே யதுவம்சம் உண்டானது. திதி. - காச்யபருக்குப் பிறந்த குழந்தைகளே தைத்தியர்கள் எனபபடுவர. இவர்களது மற்ரொரு குழந்தை தாரகாசுரன். தம்பி சூரபத்மன்.

பிருகு - கியாதி வழிவந்த சுக்ராச்சாரியர் தைத்தியர்கட்கு குரு ஆவார். இவர் பிரியவிருதன் என்ற மனுகுமாரனின் மகளாகிய ஊர்ஜஸ்வதியை மணந்து தேவயானி என்ற மகளைப் பெற்றார். இவர் இறந்த அசுரர்களையெல்லாம் உயிர்ப்பிக்கும் ஆற்றல் பெற்றவர்.

கசியபரின் மனைவி தனு. இவளது பிள்ளைகள் துவி மூர்த்தா, சம்பரன், அஜோமுகன, சங்குகிரன், கபிலன், சங்கரன், ஏகவத்திரன், தாரகன், சொர்பானு, விருஷபர்வா, புலோமனி, விப்ரசித்தி முதலியோர் தானவர்கள் எனப்படுவர்.

கீழ் ஏழு உலகங்களான அதலம், விதலம், சுதலம், தராதலம், மகாதலம், ரசாதலம், பாதாளம் இவற்றில் முறையே மயனின் பிள்ளையான சுபலன், ஆடகேசுவரன், பலிச்சக்ரவர்த்தி, அசுர தச்சனாகிய மயன், ரட்சகன், காளியன், சுதஷ்ணன், புலிகன், தயித்தியர்கள், நிவாத கவசர்கள், காலகேயர்கள் சங்க்ன். மகாசங்கன், சுவேதன், தனஞ்செயன், திரிதராஷ்டிரன், சங்கசூடன், கம்பனன், அசுவதரன், வேதகத்தன், வாசுகி என்ற மஹாசர்ப்பங்கள் வசிக்கின்றனர்.

ஒன்று முதல் ஏழு வரை உள்ள அதலபாதாளமும், எட்டாம் உலகமாகிய பூமியும் 9,10,11,12,13,14 ஆகிய ஏழு உலகங்களும் மூன்று லோகங்கள் என்று பொதுவாகச் சொல்லப்படும். இந்த ஏழாம் மனுவந்தர அவதாரமாகிய திரிவிக்ரமர் பலியிடமிருந்து யாசித்தும் பெற்று இவற்றை இந்திரனிடம் அளித்துள்ளார்.

இனிவரும் எட்டாம் மனுவந்தரத்தில் அவர் சார்வ பூமண என்ற அவதாரம் செய்து திரும்பவும் இந்திரனிடமிருந்து பலியிடம் (அசுர குல வேந்தனாகிய) அளிப்பார். பாணசுரன் மகளான உஷை க்ருஷ்ணபரமாத்வாவின் பேரனாகிய அனிருத்தனை விரும்பியதால் அவர் பெரிய யுத்தமே செய்து இவர்களுக்கு மணமுடிதது வைத்தார்.

சிருஷ்டியின் தொடக்கத்தில் ப்ரம்ம இச்சை காரணமாக தேவ, அசுர, பிதுர், மனுஷயர் நான்கு பிரிவினரும் பிரம்மாவிடமிருந்தே தோன்றினர். அதன் பின்பு அவர்கள் வெவ்வேறு தாய்-தந்தையர்க்குப் பிள்ளைகளாகத் தோன்றுவர். கர்ம சாதகம் கருதியே நாம் ஜீவாத்மாக்களாகிய நாம் மீண்டும் மீண்டும் படைக்கப்படுகிறோம் பிறக்கிறோம்.

இறைவனாலோ, தேவர்களாலோ கொல்லப்படாமல் சுவாதீனமாக அசுர குணமற்ற அசுரர்களும் உண்டு. அப்படிப்பட்ட அரக்கன் விபீஷணன் ஆவார். அசுரன் பலி ஆவார்.

தொகுப்பு: என்.சி. கோபாலன் - சென்னை.

(தொடர் கட்டுரை)

# திருமலை வரலாறு


ஆங்கில மூலம் :
டாக்டர். சாது சுப்பிரமணிய சாஸ்திரி

தமிழாக்கம் :
திரு. அ. நடராஜன்


## அத்தியாயம் 4

## வெவ்வேறு யுகங்களில் கிரீடாத்ரியின் வெவ்வேறு பெயர்கள்

வெவ்வேறு யுகங்களில் வெவ்வேறு சமயங்களில் பல்வேறு காரணங்களினால் முனிவர்கள் இக்கிரீடாத்ரிக்குப் பல்வேறு பெயர்களைச் சூட்டியுள்ளனர். கிருத யுகத்தில் விருஷபாசலம் என்றும், திரேதாயுகத்தில் அஞ்சனாசலம் என்றும், துவாபர யுகத்தில் சேஷாசலம் என்றும், கலி யுகத்தில் வேங்கடாசலம் என்றும் இம்மலை அழைக்கப்பட்டுள்ளது. (வராக.புரா. பகுதி 1 அத்தி. 4, சுலோகங்கள் 21-37)

**சிந்தாமணி :**

விருமபிய பொருள்களைத தருவதனால்.

**ஞானாத்ரி :**

அறிவினை வழங்கும் சக்தியினால்.

**தீர்த்தாத்ரி :**

மலையின் மீது புண்ணிய தீர்த்தங்கள் இருப்பதனால.

**புஷ்கராத்ரி :**

மலை மீதுள்ள நீரநிலைகளில் செந்தாமரை மலர்கள் ஏராளமாக வளர்வதனால்.

**விருஷபாத்ரி அல்லது தர்மாத்ரி :**

தரும தேவதை தனது வளமைக்காகத் தவம் செயதத னால.

மேலும், விருஷபாசுரன் எனனும அரக்கன் ஒருவன் கிருத யுகத்தில் இம் மலையினை ஆக்கிரமித்துக்கொண்டு அங்கிருநத முனிவர்களைத் துன்புறுத்தி வந்தான். அவன் அங்கிருந்த தும்புரு தீரததத்தில ஐயாயிரம ஆணடுகள கடும்தவம் புரிந்தான. அபபோது ஒவ்வொரு நாளும தனது தலையை வெட்டி, அதை ஒரு மலருடன கூட நரசிம்மசுவாமியின் சாலக கிராமத்திற்கு (இயற்கையாக உருவாகிய சிலை யுருவததிற்கு)ப் பூசை செய்து அளித்து வந்தான; பூசை முடிந்தவுடன வெட்டுண்டதலை மீணடும் அவன உடலில் சேரநது விடும. நாராயணன அவன் முனதோன்றி அவனுககு என்ன வேண்டும் எனககேடடார். அவன் தனக்கு வரம் எதுவும் தேவையில்லை என்றும், அவருடன் போர் புரிய



வேண்டும் என்று விரும்புவதாகவும் கூறினான். எனவே, இருவரும் போர்புரியத் தொடங்கினர்; போர் நீண்டகாலம் சம பலத்துடன் கடுமையாக நீடித்தது. அப்போது நாராயணன் தமது சுதர்சன சக்கரத்தைப் பிரயோகித்தார். உடனே அவ்வரக்கன் தலைவணங்கி, சுதர்சன சக்கரத்தினால் கொல்லப் படுவோர் பரமபதத்தை அடைவார்கள் ஆகையால் தனக்கும் அது கிடைக்கும் என்றும்,. தனது நினைவாக இம்மலை 'விருஷபாசலம்' என அழைக்கப் பட வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டான். நாராயணனும் அவ்வாறே வரமளித்து, அவனது தீவிரமான பக்தியினை மெச்சி அவனைத் தழுவிக்க கொண்டார். எனவே, கிருத யுகத்தில் இம்மலை 'விருஷபாசலம்' என அழைக்கப்பெற்றது.

[பவிஷ்யோத்தர புராணம், அத்தியாயம் 1, சுலோகங்கள் 40-68; மிதிலை மன்னரான ஜனகருக்கு அவருடைய புரோகிதர் சதானந்தர் கூறியது.]

## கனகாத்ரி:

பொன்குடம் போன்ற வடிவம் காரணமாக.

## நாராயணாத்ரி:

நாராயணன் என்னும் அந்தணன் கடும் தவம் புரிந்து, தன் பெயரை இம்மலைக்குச் சூட்ட வேண்டும் எனக்கோரியதனால்.

[இம்மலைக்கு நான்கு யுகங்களில் முறையே விருஷாத்ரி அல்லது விருஷபாத்ரி, அஞ்சனாசலம், சேஷாசலம் மற்றும் வேங்கடாசலம் என்னும் பெயர்கள் இருந்தன எனப் பவிஷ்யோத்தர புராணம் கூறுகின்றது; ஆனால் வராக புராணம், பகுதி 2, அத்தியாயம் 1, சுலோகங்கள 57-58க்கேறப அதன் பெயர் கிருதயுகத்தில் அஞ்சனாசலம் ஆகவும், திரேதாயுகத்தில் நாராயணாத்திரியாகவும், துவாபரயுகத்தில் ஸிம்மாத்ரி ஆகவும், கலியுகத்தில் வேங்கடாசலம் அல்லது வேங்கடாத்ரி ஆகவும் இருந்ததாகச் சொல்லப்பட்டுள்ளது.]

## வைகுண்டாத்ரி:

விஷ்ணுவின் நிரந்தர புனித வாசஸ்தலமாகிய வைகுண்டத் திலிருந்து இங்கு எடுத்து வரப்பெற்று அமைக்கப்பட்டதன் காரணமாக.

## சிம்மாசலம்:

அரக்கனான இரணியகசிபுவைக் கொல்லவும் அவனுடைய மகனான பக்தன் பிரகலாதனைக் காப்பாற்றவும் விஷ்ணு இம்மலை மீது நரசிம்மாவதாரம் எடுத்ததனால்.

## அஞ்சனாத்ரி:

கேசரி என்னும் வனவாசிகளின் தலைவன் ஒருவனின் மனைவியாகிய அஞ்சனாதேவிக்குக் குழந்தை இல்லாததனால், அவள் வலிமை நிறைந்த மகன் ஒருவனைப் பெற்றுக்கொள்ளும் பொருட்டு, மதங்க ரிஷியை அணுகி, அவரது அறிவுரையினை வேண்டினாள். அவர்கள் தங்கியிருந்த (ஹம்பிக் கருகிலுள்ள) பம்பை நதிக்கரையிலிருந்து கிழக்கே ஐம்பது யோஜனை (ஐந்நூறு மைல்) தொலைவிலுள்ள நரசிம்ம ஆசிரமம் சென்று, அங்கிருந்து தெற்கே போய் நராயணகிரிக்கு வடக்கே சுமார் ஒரு குரோசத் தொலைவில் (இரணடரை மைல் தொலைவில்) வேங்கடாசலத்தின் மீதுள்ள ஆகாசகங்கையை அடைந்து, பன்னிரண்டு ஆண்டுகள் தவம் செய்தால் மகப்பேறு கிட்டும் என அவர் அறிவுரை கூறினார். அவ்வாறே அவள் சுவாமி புஷ்கரிணிக்குச் சென்று, அதில் நீராடி, அதன் மேற்குக் கரையிலுள்ள அரச மரத்தை வலம் வந்து வராக சுவாமியைத் தரிசித்து, ஆகாச கங்கை அருவியினை அடைந்து, தனது கணவனின் அநுமதியினையும் அங்கு வசித்துவந்த முனிவர்களின் ஆசிகளையும் பெற்று, தனது பன்னிரண்டு ஆண்டுத் தவத்தினை மேற்கொண்டாள். முதல் வருடத்தின்போது அவள் நீரை மட்டுமே உணவாகக் கொண்டு தவம் புரிந்தாள். வாயுதேவன் அவள் மீது பரிவுகொண்டு, ஒவ்வொரு நாளும் அவளுக்கு இனிப்பான கனி ஒன்றைக் கொடுத்து வந்தான். பன்னிரண்டாவது ஆண்டின் முடிவில் உயிர்பொருள் பொதிந்துள்ள கனியினை அளித்தான். அதன் விளைவாக அவள் கருவுற்று, உரிய காலத்தில் ஆண்மகவு ஒன்றைப் பெற்றாள். அக்குழந்தையே அநுமன் அல்லது ஆஞ்சநேயர்; தேவர்களுக்கும் இராமனுக்கும் உதவி புரிந்தவர். அஞ்சனாதேவி இம்மலையில் தவம் புரிந்ததால் இது திரேதாயுகத்தில் அஞ்சனாத்ரி எனப்பெயர் பெற்றது.

[இவ்விவரம் பவிஷ்யோத்தர புராணத்தில் அத்தி. 1, சுலோகங்கள் 68-84இல் விரிவாகத் தரப்பட்டுள்ளது; வராக புராணம் பகுதி1, அத்தி. 4, சுலோகங்கள் 28-29 இரண்டிலும் அஞ்சனாதேவியின் தவமும் அநுமனின் பிறப்பும் பற்றிய ஒரு சிறு குறிப்பே காணப் படுகின்றது.]

### வராகாத்ரி :

வராக க்ஷேத்திரமாய் இருப்ப தனால்.

### நீலகிரி :

வானரங்களின் தலைவனான நீலன் இம்மலையில் நிரந்தரமாகக் குடிகொண்டிருப்பதனால்.

### வேங்கடாசலம் அல்லது வேங்கடாத்ரி :

'வேம்' என்னும் வேரச்சொல்லிலிருந்து கிடைக்கும் 'அமிரதம்' என்னும் பொருளதரும் சொல், 'கடம்' என்னும் வேரச சொல்லிலிருந்து கிடைக்கும் 'ஐசுவரியம்' என்னும் பொருள் தரும் சொல் இவை இரண்டும் இணைந்து வேங்கடம் என்றுயிற்று; எனவே, இம்மைச் செல்வங்கள், மறுமைச் செல்வங்கள் இரண்டினையும் அது வழங்குவதாகும்.

வேம்கரோ அம்ருத பீஜஸ்து
கடம் ஐச்வர்யமுச்யதே,
அம்ருத் ஐச்வர்ய ஸங்கத்வாத்
வேங்கடாத்ரி ரிதி ஸ்ம்ருதஹ.
(வராக.புரா.பகுதி1, அத்தி.4, சு.31)

வேஙகடம் என்னும் சொல்லின் இரு வேர்ச்சொல்களுக்கு மற்றொரு பொருளும் கொடுக கப்பட்டுள்ளது. அதாவது 'வேம்' என்றுல் 'அனைத்துப் பாவஙகள்', 'கட' என்றுல், எரிப பது. இப்பொருளினை விளக்கும் கதை - கலியுகத்தில காள ஹஸ்தியைச் சேர்ந்த மாதவன் என்னும் அந்தண இளைஞன் ஒருவனின் பாவங்களை வேங்கடமலை அழித்த கதை பிரம்மாண்ட புராணத்திலும் பவிஷ்யோதர புராணத்திலும் விரிவாக விவரிக்கப்பட்டுள்ளது. முந்தைய புராணத்தில் பிருகு முனிவர், வேங்கடாசல மஹாத்மியத்தின் ஒரு பகுதியாக இக் கதையினைச் சொல்லக்கேட்ட முனிவர்களினால் இப்பெயர் இடப்பட்டதாகவும், பிந்தைய புராணத்தில் நான்முகனால் (பிரமனால்) கலியுகத்தில் இப்பெயர் வழங்கப்பட்டதாகவும் சொல்லப்படுகிறது.

அநேன பாபஜாலம் வை
யஸ்மாத்தக்தம் த்விஜன்மனஹ
(பிரம்மா.புரா. அத்.6, சு.42)

வேங்கடாசல இத்யஸ்ய
ப்ரஸித்திர் புவி வர்த்ததாம்,
ஸர்வ பாபானி வேம் ப்ராஹுஹ
கடஸ் தத் தாஹ உச்யதே.
(பிரம்மா.புரா. அத்.6, சு.43)

ஸர்வ பாபதஹோ யஸ்மாத்
வேன்கடாசல இத்யபூத்,
(பிரம்மா.புரா. அத்.6, சு.44)

ததா நாம சகாராத்ரேர்
வேன்கடாசல இத்யபி,
ஸர்வபாபானி வேம் ப்ரா ஹுஹ
கடஸ் தத்தாஹ உச்யதே.
(பவிஷ்யோ.புரா. அத்.1, சு.226)

தஸ்மாத் வேன்கடசைலோ
அயம் லோகே விக்யாதா
கீர்த்திமான்
(பவிஷ்யோ.புரா. அத்.1, சு.227)

### ஸ்ரீநிவாஸகிரி :

இம்மலையின் மீது தேவர்களுக்கு விஷ்ணு "ஸ்ரீநிவாஸ"ராக (வல மார்பினில் இலட்சுமியின் உறைவிடம் உள்ளவராக)க் காட்சி அளித்ததனால்.

### ஆனந்தாத்ரி :

இம்மலையின் மீது பகவான் நிகழ்த்திய ஏராளமான லீலைகள் காரணமாக வைகுண்டபுர வாசிகளால் இடப்பட்ட பெயர்.

### ஸ்ரீசைலம் :

செல்வத்திற்குரிய இலட்சுமி இருப்பதனாலும் வளம் அளிக்கும் சக்தி இம்மலைக்கு இருப்பதனாலும்.

### சேஷ சைலம் சேஷாசலம் அல்லது சேஷாத்ரி :

துவாபரயுகத்தின் போது வாயுதேவன் ஸ்ரீநாராயணனுக்குத் தனது நமஸ்காரங்களைத் தெரிவிப்பதற்காக வைகுண்டத்திற்கு விரைநது சென்றுன. அப்போது விஷ்ணு இலட்சுமியுடன் உள்பகுதியில் சயனித்திருநதார். வாயிலைக் காத்துக்கொண்டிருந்த ஆதிசேஷன் வாயுதேவனை உள்ளே போக விடாமல் தடுத்தான். இதனால் வாயுதேவன் கோபமடைந்தான். இருவரும் போரிடத் தொடங்கினர். நாராயணன் அவர்களிடம் சென்ற போது ஒவ்வொருவரும் தமது வலிமையே சிறந்தது எனக்கூறினர. இவர்களில் எவரது வீரம் சிறநதது என்பதைச் சோதிபபதற்காக, மேருமலையின் வடபகுதியின் கிளையான ஆனந்தமலையை ஆதிசேஷன் சுற்றிக்கொள்ள வேண்டும் என்றும வாயுதேவன், ஆதிசேஷன் பிடியிலிருந்து ஆனந்த மலையை பலமாகக் காற்று வீசி விடுவிகக வேண்டும் என்றும் கடவுள் யோசனை கூறினார். இப் போட்டி மிகத் தீவிரமாக நடைபெற்றது. இந்நிகழ்ச்சி பவிஷ்யோத்தர புராணம், அத்தியாயம் 1, சுலோகங்கள் 85-132இல் விவரிக்கப்பட்டுள ளது. வாயுதேவனின் கடுமையான காற்று வீச்சுக்களினால் உலகங்கள் நடுகக மடைந்தன; பிரமன், இந்திரன் மற்றும் பிற தேவதைகள் போட்டியை நிறுத்துமாறு அவர்களை வேண்டினர்; ஆனால் போட்டியாளர இருவரும் அவர்கள் வேண்டுகோளைப் பொருட்படுத்தவில்லை. அப்போது பிரமனும் பிறரும் ஆதிசேஷனிடம் "உனது உயரவான வலிமை விஷ்ணுவிற்குத்

தெரியும்; சிவனும் அதனை அறிவார்; எங்களுக்கும் அது தெரிந்ததே. உலகின் நன்மைக்காக, மலையின் மீதுள்ள உனது பிடியினை உனது படத்தைச் சிறிது தூக்கி, வாயு தேவனுக்கே வெற்றியை வழங்கிவிடவும். எப்போதும் விஷ்ணுவின் சேவையில் ஈடுபட்டிருக்கும் நீர் நிறைவு பெற்றவர்; எனவே, பொறுமை உமக்குப் பொருந்தாது" எனக் கூறினர். ஆதிசேஷனும் தனது பிடியினைத் தளர்த்தினார். வாயுதேவன் பலத்துடன் வீசவே, ஆதிசேஷனுடன் கூட ஆனந்தமலையும் சுவர்ணமுகி (பொன்முகலி) ஆற்றுக்கு வடக்கே அரைக்குரோசத் தொலைவிலிருந்த பகுதிக்கு வீசி ஏறியப்பட்டது. ஆதிசேஷன் தனது தோல்வியின் காரணமாக ஏமாற்றமடைந்து வருந்தினார். அப்போது பிரமனும் பிறரும் "நீர் வேங்கடாத்ரி மலையுடன் ஐக்கியமாகு, விஷ்ணு உம்மீதே வாசம் புரிவார்" என அவரை உற்சாகப்படுத்தித் தத்தம் இடங்களுக்குச் சென்றனர். ஆதிசேஷனும் விஷ்ணுவின் முன் விழுந்து வணங்கினார். உடனே முப்பது யோஜனை நீளமும் பத்து யோஜனை அகலமும் கொண்டதான பரந்த சேஷாத்ரி அல்லது சேஷமலையாக மாற்றமடைந்தார். அவரது தலை (படம்) திருவேங்கடவன் உறையும் வேங்கடமலையாகவும், அதன் நடுப்பகுதி நரசிம்ம சுவாமி கோயில் கொண்டுள்ள அகோபிலமாகவும், தன் வால் பகுதி மல்லிகார்ஜுனசுவாமி வதியும் ஸ்ரீசைலமாகவும் விளங்கின. இங்ஙனம், துவாபரயுகத்தில் இம்மலை தூக்கிய தலை (படம்), சுருண்டுள்ள உடல், நீண்ட வால் ஆகியவற்றுடன் கூடிய ஆதிசேஷன் வடிவில் இருந்ததால் சேஷாசலம் அல்லது சேஷாத்ரி எனப்பெயர் பெற்றது.

மேலுலகில் கிரீடாசலமாகவும், புவியுலகில் வராக சுவாமியும் வேங்கடேசுவரரும் இருக்குமிடமாகவும் விளங்குவதால் புனிதமடைந்துள்ள இம்மலையும், இறைவனுடைய குணநலன்களைப் போன்றே, போற்றுதற்குரிய சக்திகளை ஏராளமாகப் பெற்றுள்ளது. நான்முகனான பிரமன், ஆறுமுகனான சுப்ரமண்யர், ஆயிரம் கணணுடைய இந்திரன், ஆயிரம் தலையுள்ள ஆதிசேஷன் ஆகியோரால் கூட இம்மலையின் மேன்மையினையும் பெருமையினையும் விவரிக்க முடியாது. அவ்வாறு எனில், பிறர் எவ்வாறு அதனை வருணிக்க இயலும்? சாதாரண மக்களுக்கு அது ஒரு வெறும் மலையாகத் தோன்றினாலும் மக்களின் பக்தி அதன்மீது தூய்மையடைந்து, அவர்களின் பக்தியின் தீவிரத்திற்கேற்ப அவர்கள் விரும்பியனவற்றைப் பெறுவார்கள். சுருங்கச் சொல்லின், நான்கு மானிடப் பேறுகளான அறம், பொருள், இன்பம், வீடு ஆகியவற்றை அடையே முயலுவோருக்கும், அறநூல்களில் விதிக்கப்பட்டுள்ள சடங்குகளை முழுவதாகச் செய்யும் சக்தி இல்லாதவர்களுக்கும் வேங்கடமலையையன்றி வேறு புகலிடம் எதுவும் கிடையாது.

(வராக. புரா.பகுதி 1, அத்தி.4,
சுலோகங்கள் 35-37)
(வராக. புரா.பகுதி 1, அத்தி.3,
சுலோகங்கள் 32-33)

(தொடரும்)



அண்மையில் ஆந்திரமாநில அறநிலையத்துறை அமைச்சர் திரு. தாமசர்லா. ஆஞ்சநேயலு அவர்கள் திருமலைக்கு வந்திருந்தபோது

# திருவண்ணாமலை தீபச்சிறப்பு!

புலவர் மு. மணி - வேலூர்.

## முன்னுரை :

திருவண்ணாமலையைத் தலைநகராகக் கொண்டு விளங்கும் சைவ சமயச் சிறப்புடைய மிகப் பழைமையான தும், ஸ்ரீ அருணாச்சலம் என்ற பெயருடைய மலையோடு திகழ்வதும் திருவண்ணாமலை என்ற திருத்தலமாகும். இத்திருத்தலம் வேலூரிலிருந்து சுமார் 70 கி.மீ. தொலைவிலுள்ளது. இப்பூவுலகம் தோன்றிய காலத்திலிருந்தே இம்மலையும் தோன்றியதாக ஆராய்ச்சியாளர் பலர்கூறுவதால் இம்மலையின் பழமை விளங்கும். கார்த்திகை மாதத்தில் வரும் கிருத்திகையில் இத்திருவண்ணாமலையில் உள்ள அருணாச்சல மலையில் தீபம் ஏற்றுவார்கள். இந்நாளில் சுற்று வட்டாரத்திலுள்ள மக்கள் விரதமிருந்து இத்தீபத்தை வணங்கிய பின்பே உணவருந்துவதைப் பன்னெடுங்காலமாக மேற்கொண்டு வருவதால் இத் தீபத்திருவிழாவின் பழமையும் சிறப்பும் விளங்கும்.

## திருஅண்ணாமலையார் பழமை

அருணாச்சல மலையின் அடிவாரத்தில் உள்ள மிகப்பெரிய கோவிலில் குடிகொண்டிருக்கும் சிவபெருமானின் திருநாமம் ஸ்ரீஅண்ணாமலையார என்பதாகும். பார்வதிதேவியின் திருநாமம் ஸ்ரீஉண்ணாமுலையம்மையார் என்பதாகும். பழந்தமிழ் நூல்களான நற்றிணை, அகநானூறு, தொல்காப்பியம் ஆகிய பல நூல்களில் இத்தீபத்திருவிழாவின் சிறப்பு கூறப்பட்டுள்ளது. ஸ்ரீஅண்ணாமலையார் கோவில் கி.பி. ஆறும் நூற்றுண்டில் கர்ப்பக்கிரகம், அர்த்த மண்டபம், மற்றும் மகாமண்டபம் முதலியவை கட்டப்பட்டன. பின்னர் ஆண்ட தமிழக சேர, பல்லவ மன்னர்களும் கோவிலை விரிவாகக் கட்டியதாக வரலாறு மூலம் அறியலாம்.

## மலையின் சிறப்பு

அருணாச்சலமலைமீது கார்த்திகை மாதத்தில் வரும் கிருத்திகையின் போது செப்புக் கொப்பரையில் 24 முழம் துணியில் கற்பூரத்தைச் சேர்த்துச் சுற்றி நெய்யை வேண்டுமளவு ஊற்றி தீபம் ஏற்றுவார்கள். இத்தீபத்தின் ஒளியானது 20 கிலோ மீட்டர் சுற்றியுள்ள ஊர்களில் வாழும் மக்களும் காணுமளவுக்கு ஜெகஜோதியாய் எரியும். இஜ் ஜோதியைக் காண்பதற்குப் பஞ்சமூர்த்திகளும் எழுந்தருளுவதாக ஐதிகம். அருணாச்சலப் புராணத்தின்படி சூரிய, சந்திரர்கள் இம்மலையைத் தாண்டிச் செல்லாததால் மலைஉச்சியின் நிழல் யாருடைய கண்களுக்கும் தெரிவதில்லையாம்.

## தீபத்திருவிழா

திருவண்ணாமலைத் திருத்தலத்தில் தீபத்திருவிழா 13 நாள்கள் நடக்கின்றன. இதில் பத்தாம் நாள் காலை பரணி தீபமும், பகலில் பிரம்மதீர்த்தத்தில் தீர்த்தவாரியும் நடைபெறும். மாலை 6 மணிக்கு அருணாச்சல மலைமீது மிகச்சிறப்பான விழாவான "மகா தீபம்" ஏற்றப்படும். தீபத்தன்று மலையைச் சுற்றி உள்ள அஷ்டலிங்கத்தை வலம் வந்து வணங்கினால் அதிகப்பலனுண்டு எனச் சித்தர்கள் பலர் கூறியுள்ளனர். திருவாரூரில் பிறந்தால் முக்தி. சிதம்பரத்தில் நடராஜனைத் தரிசித்தால் முக்தி, காசியில் மரித்தால் முக்தி. ஆனால் திருவண்ணாமலையை மனதில் நினைத்தாலே முக்தி கிடைக்கும் என முனிவர்கள் பலர் கூறியுள்ளனர். தினமும் காலையில் எழுந்ததும் அண்ணாமலையாரை நினைத்து எழுந்தால் அத்தினம் நல்ல தினமாக விளங்கும் என்பது நம்பிக்கையாகும். அருணம் என்றால் சிவப்பு. கார்த்திகை தீபத்தன்று கீழிருந்து மேலே உள்ள மலையை நோக்கினால் மலையே அக்கினிப் பிழம்பாகக் காட்சியளிக்கும். இத்திருவிழாவைக்காண நம் நாட்டின் பல ஊர்களிலிருந்து பல ஆயிரக்கணக்கான மக்கள் இத்தலத்திற்கு வருகின்றனர்.

## சோறு கொண்டுவா!!

திருவண்ணாமலையில் குடிகொண்டிருக்கும் உண்ணாமுலையம்மையைச் சோறு கொண்டு வந்துத் தன் பசியைப் போக்கும்படி குருநமச்சிவாய தேவர் என்ற அடியார் வேண்டிப் பாட பார்வதிதேவியும் அவர் பசியைப் போக்கியருளியதாக

தனிப்பாடலின் மூலம் அறிய லாம். அப்பாடலாவது:

"அண்ணு மலையா ரகத்துக்
கினியாளே
உண்ணு முலையே உமையாளே-
நண்ணு
நினைதோறும் போற்றிச்
செயநின்னடியா ருண்ண
மனைதோறும் சோறுகொண்டுவா"

அண்ணுமலையாரின் உள்ளத் திற்கு உவப்பான பார்வ தியே! எக்குழந்தையும் பால் அருந்தாத தனங்களையுடைய வளே! உன்னடியவர்கள் பசி யின்றி தினமும் துதிக்கும்படி யாக வீடுகள் தோறும் சென்று சோறுகொண்டு வந்து அளித் துப் பசியைப் போக்குவீராக! என்பது இப்பாடலின் பொரு ளாகும்.

## பார்வதி தவம் :

தன்னைச் சிவபெருமான் பிரிந்துவிட்டதால் அவரிடம் சென்று தன்னுடலில் ஒருபா கம் தந்து அர்த்த நாரீஸ்வ ரராக இருவரும இணைந்து விளங்க வேண்டுமென பார் வதி தவம் செய்த இடமும் திருவண்ணுமலைக்கு அருகில் தான் உள்ளது. தாய பார் வதியின் தவத்திற்காக சேயா கிய முருகப்பெருமான உன் டாக்கிய ஆறே சேயாறும். இந்த ஆறு திருவண்ணு மலைக்கு வடக்கே செய்யா றென்ற பெயரில் வழங்கப்படுகி றது. இச்செய்யாற்றின் கரைக ளிலே சப்தக்கைலாயக்கோயில் களும் வடக்கு தெற்கு அமைந திருப்பதைக் காணலாம்.

## கிரிவலம் சிறப்பு :

இன்றைய நாளில் நூற் றுக்கணக்கான அடியார்கள் பிரதி மாதம் பௌர்ணமியன்று விடியற்காலையில் அருணுச்சல மலையை வலம் வந்தால் பாவங்கள் அகன்று முக்தி கிடைப்பதாக வலம் வருகின் றனர். திருவண்ணுமலையைச் சுற்றியுள்ள மலைகள் எல்லாம் புனிதம் உள்ளவை. பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாகச் சித் தர்களும் யோகிகளும் இம்மலை களின் மீது வாசம் செய்து வருகின்றனர். ஸ்ரீசேஷாத்திரி சுவாமிகள், பகவான் ரமண மக ரிஷி பூண்டிமகான் ஆகியோர் அருணுச்சலத்தின் தீப அருளைப் பெற்று முக்தியடைந்தவர்க ளில் சிலராவர்.

## முடிவுரை :

கார்த்திகை மாதக் கிருத்தி கையின் போதும், முன்நாளும், பின்னாளும் ஆக மூன்று நாள் களும் நம் தமிழ்நாட்டிலுள்ள இந்துக்கள் வீடுகளின் வாயிற் படிகளில் அகல் விளக்குகளில் நல்லெண்ணய் ஊற்றி மாலை யில் விளக்கேற்றிச் சிவனை வழிபடும் வழக்கம் இருந்து வரு கிறது. வரிசையாக ஏற்றப்படும் அகல் விளக்குகள் வீடுகளுக்கு அழகையும், ஒளியையும் தந்து சிறப்பூட்டுகின்றன. கார்த்தி கைத் தீபத்திருவிழா இந்துக் கள் பல்லாண்டுகளாகக் கொண் டாடிவரும் ஒரு சிறப்பானதொரு திருவிழாவல்லவா? கார்த் திகை தீபத்திருவிழாவன்று தீப மேற்றி ஸ்ரீஅண்ணுமலையாரை வணங்கி முக்தியைப்பெற இன் பமுடன் இக வாழ்க்கையை நடத்துவோமாக!! *

# நீராடல்

நீராடும் திசை : நதியாக இருந்தால் நீர்வரும் திசைக்கு எதிர்முகமாக நின்றும் குளம் முதலிய நீர் நிலைகளில் கிழக்கு அல்லது வடக்கு முகமாக நின்றும் நீராடுதல் வேண்டும். நீராடல் ஆறு வகைப்படும்.

1. **நித்தியம்** - நாள்தோறும் செய்யும் நீராடல்.
2. **நைமித்தியம்** - சண்டாளர், பிணப்புகை, மாத விலக்குப் பெண்டிரைத் தொட்டுவிட்டால்- செய்வது.
3. **காமியம்** - கிருத்திகை முதலிய நாள்களில் புண்ணியச் செயல் அல்லது இச்சை பூர்த்தி செய்வது.
4. **கிரியாங்கம்** - பித்ரு காரியங்கள் செய்தல் - பொருட்டுச் செய்வது.
5. **மலாபகர்ஷணம்** - எண்ணை தேய்த்துக் குளித்தல் முதலியன.
6. **கிரியமஸ்நானம்** - புண்ணிய நதிகள், தீர்த்தங்கள் முதலியன.

ஒன்பது புனித தீர்த்தங்கள்:- 1. கங்கை 2. யமுனை 3. கோதாவரி 4. நர்மதை 5. சரஸ்வதி 6. காவிரி 7. குமரி 8. பாலாறு 9. சரயு என்பன.

தொகுத்தவர்: கமலா மாரியப்பன் - கோவை.

# தி.தி. தேவஸ்தானத்தாரின் அரும்பொருட் காட்சியகம்

இந்து சமயத்தின் பெருமையினையும், இந்திய மண்ணின் கலாசார அருமையினையும் பிறருக்கு எடுத்துக் காட்டி, அவை மேலும் சிறப்புறும் வகையில் நாளைய இந்தியனைச் சிந்திக்க வைக்கும் ஒரு வாய்ப்பாக, தி.தி.தே. மேற்கொண்டு வரும் பல முயற்சிகளில் ஒன்ருகத் திகழ்வது தற்போது மேலாண்மையினால் அமைக்கப்பட்டிருக்கும் அருட்பொருட் காட்சியகங்கள். தற்போது திருமலையில் கோயிலுக்கெதிரில் உள்ள ஆயிரங்கால் மண்டபத்தில் செயல்பட்டுக் கொண்டிருக்கும் அரும்பொருட் காட்சியகமானது 27-12-80 அன்று முன்னாள் இந்தியக் குடியரசுத் தலைவர் திரு. என். சஞ்சீவி ரெட்டி அவர்களால் திறக்கப்பட்டது. இங்கு திருப்பதி மற்றும் அதைச் சுற்றியுள்ள இடங்களில் கண் டெடுக்கப்பட்டுள்ள பழங்கால நினைவுச் சின்னங்கள், கோயில்கள் சம்பந்தப்பட்ட வேலைப்பாடுகள், சிற்பங்கள், வைதீகச் சடங்கு முறைகள் யாவும் காட்சிக்கு வைக்கும் எண்ணத்தில் இக்காட்சியகம் உருவாக்கப்பட்டுள்ளது. மேலும், தி.தி. தேவஸ்தானத்தாரிடமும் மற்றைய இடங்களிலும் சேகரிக்கப் பட்ட மர வேலைப்பாடுகள், விக்ரகங்கள், உலோக உருவமைதிகள், இசைக்கருவிகள், போர்க்கருவிகள் இக்காட்சியத்தில் இடம் பெறச் செய்யும் முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன. மறைந்த அறிஞர் திரு. வேட்டுரி பிரபாகர சாஸ்திரி அவர்கள் ஆந்திர நாட்டு பல ஜமீந்தார்களிடமிருந்து சேகரிக்கப்பட்ட பொருட்களும் இக்காட்சியகத்தை அலங்கரிக்கின்றன. மற்றெரு அரும்பொருட்காட்சியகம் (எஸ்.வி. கோயில்கலை களஞ்சியம்) வைணவ நெறிமுறைகளைச் சித்தரித்திடும் வகையில் திருப்பதியில் ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி வடக்கு மாடவீதியில் கச்சேரி நம்மாழ்வார் கோயிலுக்கருகே பெரி யாழ்வார் மண்டபத்தில் அமைந்துள்ளது. இக்காட்சியத்தில் வைணவப் பிரிவின் ஆதியும், அதன் வளர்ச்சியும், சிற்பக்கலை, கோயிற்கலை, உருவமைதிகள், ஆழ்வார்கள், திவ்ய க்ஷேத்ரங்கள் மேலும் மற்றைய கலைகள் சம்பந்தப்பட்ட பொருட்கள் இடம் பெற்றுள்ளன.

**வைணவத்தின் ஆதியும் அதன் வளர்ச்சியும் :**

இபபிரிவில் வைணவ மதத்தின் தொன்மை விளக்கப்படடுள்ளது. மகாவிஷ்ணு என்று வேதத் தாலும் ஸ்ரீமந் நாராயணன் என்று உபநிஷத்துககளாலும் வணங்கப்பெற்று வளர்ந்த திருமால் வழிபாட்டு வரலாறு விளக்கப்படடுள்ளது. இத்திருமால் வழிபாடு இன்று நாடு முழுவதும் 200 வழி நிலைகளில் போற்றப்படுகின்றது. வைகானஸம், பஞ்சாராத்ரம் என்ற ஆகம முறைகளில் தென்னாட் டில் வழிபடப்பட்ட வைணவம் பற்றிய. வளர்ச்சி, அட்டவணை முறையில் விளக்கப்பட்டுள்ளது. தொன்மை மிக்க வைணவத்திருத்தலங்களில் காணப்பட்ட சித்திரங்களும், 15-வது நூற்றுண்டைச் சார்ந்த அரிய சிற்ப உருவமைதிகள் குறிப்பாக நாகலாபுரம் திருக்கோயிலில் கிடைக்கப்பெற்றவைகளும் இங்குக் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

**கோயில் நிர்மாண விளக்கங்கள் :** ஆகம மற்றும் சிற்ப இலக்கணப்படிக் கட்டப்பட வேண்டிய கோயில் அளவு முறைகள், கோயில் கட்டுவதற்கு இடம், தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய நியதிகள், முறைகள் ஆகியன படங்கள், மாதிரிகள் மூலம் விளக்கப்பட்டுள்ளன.

**சிற்ப அளவு முறைகள் :** ஆண், பெண் சிற்ப உருவமைதிகள் எந்த அளவு முறைகளில் இருந்திட வேண்டும் என்ற விளக்கங்கள் இங்கு இடம் பெற்றுள்ளன.

**சிற்பங்கள் :** விஷ்ணுவின் திருவுருவ அமைதிகள், எந்தெந்த உருவமைதிகளுக்கு எந்தெந்த வகையின ஆடை, ஆபரணங்கள் இருந்திடல் வேண்டும் என்பதை இப்பிரிவு தெளிவுற எடுத்துக் காட்டுகின்றது.

**ஆழ்வார்கள் :** தென்னாட்டில் வைணவம் தழைத்தோங்க வகை செய்த ஆழ்வார்கள் மற்றும் விசிஷ்டாத்துவைதக் கொள்கையின் தந்தையான ஸ்ரீராமானுஜரின் வைணவத் தொண்டின் சிறப்பு இங்கு விளக்கப்படுகின்றது.

**வைதீகச் சடங்குகள் :** அஷ்டதஸ சம்ஸ்காரங்கள் இப்பிரிவில் விளக்கப்பட்டுகின்றன. பிறப்பு முதல் இறப்பு வரை ஒவ்வொரு இந்துவும் கடைப்பிடிக்க வேண்டிய வைதீக சடங்கு முறைகள் தெளிவுறுத்தப்படுகின்றன. கோயில் வழிபாட்டின முக்கியத்துவம் இங்குச் சித்தரிககப்படுகின்றது. வைணவக் கோயில்களில் பயன்படுத்தப்படும் பாத்திரங்கள, வாகனங்களின் மாதிரிகளும் இங்குக் காடசி அளிககின்றன.

**108 திருத்தலங்கள் :** 108 வைணவத் திருப்பதிகளில் உளள கோயில்களின் கட்டிடச் சிறப்பு, சிற்பச் சிறப்புக்கள் போன்றவற்றைத் தெரிந்து கொள்ளும் வகையில் 108 கோயில்களின் புகைப்படங்கள் இங்கு இடம்பெற்றுள்ளன.

**கலைகள் :** இப்பிரிவில் திருமாலின் புகழ் பாடிய மெய்யடியார்களின் சிறப்பு தெரிவிக்கப்பட டுள்ளது. நவீன காலம் வரை சேகரிக்கப்பட்ட விஷ்ணு, சக்தி, ஷண்முகர போன்ற பல்வேறு கடவுளர்களின் உருவமைதிகள் இங்கு இடம்பெற்றுளளன. குண்ட்ரபாக்கத்தில 3வது ராஜராஜன் கோயிலிலிருந்து எடுக்கப்பட்ட சேகரிப்புகள் இப்பகுதியின் வரலாற்றைச் சிறப்புறக்கூறும்.

அனுமதி நேரம்: காலை 8 மணி முதல இரவு 8 மணி வரை.

அனுமதிக் கட்டணம்: பெரியோர: ரூ.1/- சிறுர்: 0-50.

பொறுப்பாளர்.

# நலம் கோடிதரும் நல்நாமம் கோவிந்தா!

திரு. கோ. தனபால் - திருவண்ணமலை.

திருமங்கையாழ்வார் அருளிச்செய்த வேதங்களின் அமுத ஊற்ருன "பெரிய திருமொழி"யில் அஷ்டாக்ஷர மகா மந்திரமாகிய திருமந்திரத்தை சாதிக்கிற யாவருக்கும் கோரிய பலன் கிடைக்கும் என்பது உலகப் பிரசித்தம். உய்ய வழி காட்டும் அருளிய வாக்கில்....

**"ஓடினே னோடி யுய்வதோர்**
**பொருளால்**
**உணர்வெனும் பெரும்பதந்**
**தெளிந்து**
**நாடினேன் நாடி நான் கண்டு**
**கொண்டேன்**
**நாராயணு வென்னும நாமம்"**

என்பார் ஆழ்வார் பெருந்தகை. இறைவனின் பேரருளால் பெற்றேன். அது பாவம் போக்கியது. நல்வாழ்வு தந்தது. ஆகவே யாம் பெற்ற பெருமையை உலகம் பெறவேண்டும் என்கிருர். "மந்திரம்" என்பது இறைவனை "சூட்சுமப் பொருளால் அழைக்கும்" இலக்கணமாகும். உடல், உள்ளம், ஆன்மா யாவும் சேர்ந்து அதைச் சொல்ல வேண்டும்.

**"நற்பொருள் காண்மின் பாடி**
**நீருய்மின்**
**நாராயணுவென்னும் நாமம்"**

நாமமாகிய நற்பொருள் கூறினால் உய்ய வழி கிடைக்கும். சொல்லும் வகைச்சொல்லுவேன்.

1. "மந்திரம்"-நம்முள் ஒன்ருய் ஆகி பலன் கொடுக்க விடா முயற்சி, மனஉறுதி, ஆழ் மனதின அங்கமாக திருமந்திரம் பதியச் செய்திடல் வேண்டும.

2. மனதை வேகப் படுத்த வேண்டும். மந்திரத்தில முனைப்பு காட்ட வேண





டும். தேவையை கோருதல், ஆழ்ந்த சிந்தனை, கற்பனை யாக பெற்று விட்ட ஊக்கம் வேண்டும்.

3. ஆரோக்கியமான சிந் தனை வேண்டும், உயர்வோம், உய்வோம் என்ற மனக்கட்டுப் பாடு, இவ்வுலக வாழ்விலும், அவ்வுலக வாழ்விலும் நலம் பெறுவோம் என்ற நம்பிக்கை கொள்ளல் அவசியம்.

4. இரவும், பகலும் 'மந்திரத் தைச் சொல்ல, நம்முள் ஒன்ருகி வேண்டியது நடக்கும். ஆனால் நல்லன மட்டுமே கோரவேண் டும்.

5. மந்திர ஜபத்தால் உடல்ந லம், மனநலம், தன் நம்பிக்கை நிறைந்து மனம் பூரித்து பொங்கும். அமுதம் ஊறும்.

6. நாளும், கோளும் தானாக துணை நிற்கும்.

"நற்றுணை யாகப் பற்றி
னேனடியேன்
நாராயணுவென்னும் நாமம்"

7. நமக்கு மகிழ்ச்சி வேண் டும். அதற்கு வாழ்வில் வெற்றி வேண்டும். தோல்வியை யாரும் விரும்புவது இல்லை. வெறறி பெற மன உறுதி வேண்டும். நமது வீட்டின் கதவை வெற் றித்திருமகள் தட்ட வேண்டுமா னால் மந்திர ஜபத்தால் எல் லாம் ஜெயமே என்ற, ஆழ் வாரின் நம்பிக்கை அத்திவாரம் (அஸ்திவாரம்) மனதில் பெற வேண்டும்.

"நலந்தருஞ் சொல்லை நான்
கண்டு கொண்டேன்
நாராயணு வென்னும் நாமம்"

இக்கவியில் பல்வேறு சிந் தனையில் ஓடித்திரியும் நாம் இறைவனை நினைப்பதில்லை. திருமந்திரத்தை மனதில்பதிய வைத்து வாழ்வின் பயனைப் பெற திருவேங்கடம் செல்வோம். செல்வோம் என நினைப்பதே புண்ணியம். சென்று-கண்டு- உண்டு திரும்பின் மகா பாக்கி யம் நமக்கு கிடைப்பது நிச்ச யம். 'மனம்' எப்போதும் 'திரு வேங்கடமுடையானை' சிந்தித்த வண்ணம் இருக்க, "மனச்சுனை யில்" வைத்துக் கொள்ளவேண் டும் மந்திரம் என்னும் மாமே ருவை.

"பொங்குநீர் செங்கயல்
திளைக்கும் சுனைத்
திருவேங்கடமடை நெஞ்சமே!"

1. தவறு செய்யாதே. செய் யின் திருத்திக்கொள். மீண்டும் செய்யாதே. திறமை உன்னிடம் உள்ளது. மின்சாரமாக மந்திரம் உன் உள் உள்ளது. நோக்கம் சிறந்து இருந்தால் வெற்றி நிச்சயம் உண்டு

2. கோவிந்தனை - மனமாளி கையில் கொளு கொள்ளச் செய் யுங்கள். நமக்கு எந்தத் துன் பம் வந்தாலும் ஓடிவிடும் ஒளிப் பிரகாசம் உண்டாகி எல்லோரை யும் உன்னிடம் இழுக்கும். அன் பில் ஆற்றல் பெறுவீர்கள். ஏற் றுகிற மந்திர விளக்கால் நிழல் மறைந்து போகும். போனது போகட்டும். இனி எல்லாமே நல்லதே நம்மை வந்தடையும். நித்தம் நித்தம் கோடானுகோடி மக்கள் கண்டு கருணைபெறும் திருவேங்கடக்கோவை - அவ ரின் திருநாமத்தை கண்டு கொள்ளுங்கள்.

"நாடொறும் தெள்ளியார்
வணங்கும் மலைத்
திருவேங்கடமடை நெஞ்சமே"

3. அப்போது 'செயல்' வெற்றி அடையும். துணிந்து செல்வோம். உழைப்போம். உயர்வோம். உலகம் உய்ய உன்னை ஆட்படுத்திக்கொண் டால் உனக்கு தேவையானவை உன்னை நோக்கித்தானாக வந தடையும். அனுபவங்கள் வாழ்க் கைக்கு வழிகாட்டியாய் வந்த டையும்.

4. அருளுக்கு வேண்டி திரு வேங்கடவன் பாதச் சரணடைக. தீவிரமாக நினை. கிளை யாக எண்ணங்களை ஓட் டாதே. எதைக்கோரினும் நல்ல தைக் கேள். சரியானவற்றைக் கேள். 'பற்று' என்பது உலக நன்மையாக இருத்தல் சிறப்பு. மாந்தரின் தேவையை பூர்த்தி செய்வதாக உன் தொண்டு இருந்தால் - என்ன வேண்டும்? எடுத்துக்கொள் என்று உலகம் உனக்கு வழிகாட்டும். அவன் திருநாமம் அத்துணை பலனை யும் கொடுக்கும். கண்ணே கருணையாக வடிவெடுத்தவன் வேங்கடவன் ஆவார்.

"நின்ற மாமரு திற்று வீழ
நடந்த நின்மலன் நேமியான்
....................
சென்று குன்றமெடுத்தவன்
திருவேங்கடமடை நெஞ்சமே"

1. வெற்றிபெற ஆசைபடுக. சிக்கல் நேர்பட்டுப் போகும். முயற்சி இருக்கவேண்டும். மேலான மந்திரத்தை மறக் காதே. சில மணித்துளிகள் தியானம் செய்யுங்கள். தேடுங் கள்.... எது கடினமாக நினைக்கிறீர்களோ அதையே தேர்வு செய்யுங்கள். சவால் களை ஏற்றுக்கொள்ளுங்கள். எதிர்பில்லாதது சுவையில்லா தது. எல்லாச் சவால்களை யும் வென்ற சுவாமி "பார்த் தசாரதி" அவரே திருவேங்கட வன். யார் அவனை ஆராதிக் கிறர்களோ அவர்களின் மன தில் மகிழ்வாக குடியிருப்பவன். மங்கை மணளன் ஆவார்.

"ஏத்துவார் தம் மனத்துள்ளான் இட-
வெந்தை மேவிய வெம்பிரான்
தீர்த்த_தீர்த்தடஞ் சோலை சூழ்
திருவேங்கடமடை நெஞ்சமே!

2. **உன்னை** எப்போ தும் சோதித்துக்கொள் வெற்றி நிச்சயம்! வாய்ப்பு வரும் போது ஜெயக்கொடி ஏற்றத்த வறுதே. சுற்றம் சூழ இருங் கள். அயலாரை நேசியுங்கள். மற்றவர் மகிழ செயல்படுங்கள். மந்திரச் சொரூபம் நம்முள் இருக்கும் வரை யாரும் நம்மை வெல்லமுடியாது. உருவேற்றுங் கள். உழைப்பு-வெற்றியின் திற வுகோல். ஆனால் மனப்பூட்டு திறக்கவேண்டும். சத்தியம் மறக் காதே. சாத்தியமான வரை மற் றவருக்கு உதவு. தவறுன வழி களை பின்பற்றுதே. இலவச மாக எதையும் பெற்றுக்கொள் ளாதே. உழைப்புக்கு ஏற்ற ஊதி யம் மட்டும் பெற்றுக்கொள். சோம்பலை வெட்டி முறித்திடுக. அது இறைவனால் மனிதனுக்கு கிடைத்த சாபம். 'திருநாமத் தால்' அதை வெட்டி எறிக!

3. முன்னே செல்லும் போது தடைகள் வரும். தாண்டிச் செல்ல திருவேங்கட முடை யான் துணை இருப்பார். உலகை மரியாதையோடு நோக் குக. உனக்கு அது திருப்பி கிடைக்கும். எதையும் பொறு மையாகச்செய். ஆனால் விவே கத்துடன் செய்க. சாதனைகள் உன்னை சுற்றிச் சுழல்வதை கண்கூடாகக் காண்பாய். துய ரம் தூள்பட்டுப்போகும்.

"தின் கைம் மாதுயர் தீர்த்தவன்
திருவேங்கடமடை நெஞ்சமே"

4. கோபம் கொள்ளாதே. அதை சரியான வழியில் திருப்பி விடுக. உனக்கும் உன் னைச் சூழ்ந்தவருக்கும் நன்மை ஏற்படும். நூறுமுறை தோல்வி வந்தாலும் நின்றுவிடாதே.... அடுத்த இலக்கு வெற்றியாக இருக்கும்.

5. எது சரி? எது தவறு என் பது நிர்ணயம் செய் நியாயத் திற்காக போராடு! அமைதியாக போராடு! எல்லாவற்றிலும் வினா எழுப்பு! மொழி ஆக்கம் கொள்! கணக்கிட்டு உன் சக்தியை செலவு செய்க. அற்பு தமான சந்தர்ப்பங்கள் உன்னை நோக்கி ஓடி வர இறைவன் அருளுவான். மந்திரம் மகத் தான சாதனைகளுக்கு ஒளி ஏற் றும். இன்றைய உழைப்பு நாளைக்கு முதலாகும். எதை யும் மலிவாக எண்ணுதே! எங்கு மாணிக்கம் கிடைத்தாலும் பாக்கியம் தானே! நவரத்தி னங்கள் உன காலடி விழும். எல்லாம் அவனுடைய அற்புத மான மந்திரத்தால் கிடைக்கும். எல்லாவற்றிலும் புதுமை செய். எங்கும் எதிலும் புதுமை இருக கட்டும் ஆம். பக்தனை ரச்சகம் செய்வதிலும் புதுமை செய்த வரே திருவேங்கட திருமா ளிகைக்குள் இருக்கும் நரசிம்ம நாயகன்!

"எண்டிசைகளு மேழுலகமும்
வாங்கிப் பொன்வயிற்றில் பெய்து,
பண்டோராலிலைப்
பள்ளிகொண்டவன்
பான்மதிக்கிடர் தீர்த்தவன்
. . . . . . . . . . . . . . . .
திண்டிறலரி யாயவன் திரு
வேங்கடமடை நெஞ்சமே!"

1. சந்தர்ப்பங்களை நழுவ விடுவது தவறுனது.

2. எண்திசையும் நோக்குங் கள். தீர்மானம் செய்யுங்கள். செயல்படுங்கள். ஆய்விலாக மனதை வைத்திருங்கள்.

3. உலகம் உன்னிடம் எதை எதிர் பார்க்கிறதோ அதை மந் திர சக்தியால் தொடுங்கள்.

4. எதையும் சுதந்திரமாக தீர்மானியுங்கள். எந்த சவால் களையும் ஏற்றுக்கொள்ளுங்கள்.

5. உற்சாகம் உங்களிடம் பொங்கி வழியட்டும். சுத்த மாக இருங்கள். மலம் அகற் றுங்கள். என்ன இடர்வரினும் நாமம் நலம் தரும் என்று உறு தியாக இருங்கள்.

6. போட்டி போடுங்கள். இலக்கை குறிவைத்து நக்குருங் கள். வெற்றி இலக்கை தீர்மா னம் செய்யுங்கள்.

7. அதிகாரியாவதைவிட தொண்டனாய் இருங்கள். வரு மானத்தில் மற்றவருக்கு உத வுங்கள். அமைதியாக, ஆழ்ந்த முடிவெடுங்கள்.

8. பல, நூல்களை சுற்க. செயல்மு
றைபடுத்துக. உழைப்பை முதல் போடுங்கள். எதுவும் ஹரியின் துணைகொள்ளுங்கள்.

9. பிறர் கூறும் ஆக்கப்பூர்வ மான யோசனைகளை ஏற்றுக் கொள்ளுங்கள். மனித யோச னைகளோடு அலர்மேல் மங்கை மணாளன் திருவேங்கடத் திரு மேனி அடைய அருளோடு கூடிய அவன் நாமம் சொல் லுங்கள். அப்போது விண் ணும் மண்ணும் ஆளும் பெரும் நன்மை வந்தடையும் நம்மை!

"செங்கயல் திளைக்குஞ்சுனைத்திரு
வேங்கடத்துறை செல்வனை
மங்கையர் தலைவன் கலிகன்றி
வண்டமிழ்ச் செஞ்சொல்
மாலைகள்
சங்கையின்றித் தரித்து ரைக்கவல்
லார்கள் தஞ்சம தாகவே.
வங்கமாகடல் வையங் காவலர்
ஆகி வானுல காள்வரே"

எனும் மங்களம் தப்பாது கிடைக்கும்.

# திருமலை அனந்தாழ்வான்

ஒரு சமயம் ஸ்ரீராமானுஜர் திருவாய் மொழி கால க்ஷேபம் ஸாதித்துக் கொண்டிருந்தார். "புஷ்ப மண்டபம்" எனப்படும் திருமலையில் நந்தவனம் அமைத்துத் திருவேங் கடமுடையானுக்கு புஷ்ப கைங்கர்யம் செய்வது மிகச் சிறந்தது. இக்கோஷ்டியில் இருப்பவர்களில் யாரேனும் இந்த கைங்கர்யத்தைச் செய்வாருண்டோ? எனக்கேட் டார். குளிரருவி வேங்கடமானதால் அனைவரும் திருப்பதி குளிருக்கு அஞ்சினர். அனந்தாழ்வான் எழுந்து நின்றார். அடியேனை நியமிக்க வேண்டும் என்றார். ராமானுஜர் மகிழ்ந்து "நீரல்லவோ ஆண்பிள்ளை" என்றார்.

அனந்தாழ்வான் திருமலைக்குச் சென்று நந்தவனம் அமைத்தார். "ராமானுஜன்" என்று பெயர் வைத்தார். பல்வகை புஷ்பச் செடிகள்.

அனந்தாழ்வான் மலர் கொய்யும்போது ஒருநாள் பாம்பு கடித்துவிட்டது. அவருடைய சிஷ்யர்கள் பயந்தார்கள். ஆனால் அனந்தாழ்வான் நீராடிவிட்டு ஸ்ரீநிவாஸனைச் ஸேவிக்கச் சென்றுவிட்டார். இச்செய்தி எங்கும் பரவியது. அனந்தாழ்வானே! உன்னைப் பாம்பு தீண்டி விட்டதாமே. மருந்து உட்கொண்டு விஷத்தை நீக்கிக் கொள்ளக்கூடாதா? என்றார் பெருமாள்.

"எம்பெருமானே! உமக்கு அடியேன் ராமாநுசரின் நியமனப்படி கைங்கர்யம் செய்ய வேண்டும். கடித்த பாம்பு வலிதாகில் விரஜா நதியில் நீராடி ஸ்ரீவைகுண்டத் திலே தேவரீருக்குக் கைங்கர்யம் செய்வேன். கடியுண்ட பாம்பு (தன்னை-அனந்தாழ்வானைச் சொல்லிக் கொள்கி றார்) வலிதாகில் கோனேரியில் (ஸ்வாமி புஷ்கரிணியில்) நீராடி இங்கேயே உமக்கு தொண்டு செய்வேன்" என்று அனந்தாழ்வான் பதில் சொன்னாராம். என்ன அழகான வார்த்தை! திருவேங்கடமலையும் ஸ்ரீவைகுண்டமும் ஒன்றே என்றும், விரஜா நதியே கோனேரி என்றும் குறிப்பால் உணர்த்தியுள்ளாரே! கைங்கர்யத்தில் எவ்வளவு ஊற்றம்!

திரு. கே. ராமஸ்வாமி அய்யங்கார் - சென்னை.

## வாசகர்களுக்கு...

1999-ம் ஆண்டு ஜனவரி ஸப்தகிரி இதழ் முதலாக, ஸ்ரீதேவராஜ குரு என்னும் எறும்பியப்பா அருளிய ஸ்ரீவரவரமுநி திநசர்யை என்ற நூல் ஸ்ரீமான் தி.அ. கிருஷ்ணமாசார்யர் (திருப்பதி) எழுதிய தமிழுரையுடன் தொடர்கட்டுரையாக வெளிவரும்.

ஆசிரியர்.



# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

## திருமலையில் ஆர்ஜித சேவைகள்

| வ. எண் | சேவை/உத்ஸவங்களின் பெயர்கள் | அனுமதிக்கப் படும் ஆட்களின் எண்ணிக்கை | காலம் | நாள் | ஒவ்வொரு சீட்டின் தொகை |
|---|---|---|---|---|---|
| 1. | சுப்ரபாதம் | ஒருவர் | காலை 3-00 | தினமும் | ரூ. 120/- |
| 2. | தோமாலை சேவை | ஒருவர். | காலை 3-45 to 4-30 வரை | தினமும் | ரூ. 220/- |
| 3. | அர்ச்சனை | ஒருவர் | காலை 4-30 to 5-30 வரை | தினமும் | ரூ. 220/- |
| 4. | ஏகாந்தசேவை | ஒருவர் | மாலை 10-30க்கு மேல் | தினமும் | ரூ. 120/- |
| 5. | கல்யாணோத்ஸவம் | ஐவர் | காலை 10-30 | தினமும் | ரூ. 2500/- |
| 6. | சிறப்பு கல்யாணோத்ஸவம் | இருவர் | காலை 10-30 | தினமும் | ரூ. 750/- |
| 7. | ஆர்ஜித பிரம்மோத்ஸவம் | ஐவர் | மாலை 1-00 | தினமும் | ரூ. 500/- |
| 8. | தோலோத்ஸவம் | அறுவர் | மாலை 1-30 | தினமும் | ரூ. 750/- |
| 9. | அர்ச்சனானந்தர தரிசனம் | ஒருவர் | காலை 5-00 | வெள்ளிக் கிழமைகள் தவிர | ரூ. 100/- |
| 10. | ஆமந்த்ரணோத்ஸவம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளிக் கிழமைகள் தவிர | ரூ. 620/- |
| | | வெள்ளிக் கிழமைகளில் ஒருவர் | காலை 6-30 மணி | வெள்ளிக் கிழமை மட்டும் | ரூ. 620/- |
| 11. | தோமாலை மற்றும் அர்ச்சனை | ஒருவர் | காலை 6-30 மணி | வெள்ளிக் கிழமைகள் மட்டும் | ரூ. 420/- |
| 12. | சஹஸ்ர தீபஅலங்காரசேவை | ஐவர் | மாலை 5-30 மணிக்கு பிறகு | தினமும் | ரூ. 500/- |
| | | **வாராந்திர சேவைகள்** | | | |
| 1. | விசேஷ பூஜை | ஐவர் | காலை 6-00 | திங்கள் | ரூ. 3000/- |
| 2. | அஷ்டதளபாத பத்மாராதனம் | ஐவர் | காலை 5-30 | செவ்வாய் | ரூ. 3500/- |
| 3. | சஹஸ்ரகலசாபிஷேகம் | அறுவர் | காலை 5-30 | புதன் | ரூ. 5000/- |
| 4. | திருப்பாவாடைசேவை | அறுவர் | காலை 5-30 | வியாழன் | ரூ. 5000/- |
| 5. | பூராபிஷேகம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளி | ரூ. 750/- |
| 6. | புனுகுப் பாத்திரம் | ஒருவர் | மாலை 3-30 | வெள்ளி | ரூ. 300/- |
| 7. | கத்தூரிக்கிண்ணம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளி | ரூ. 150/- |
| 8. | நிஜபாத தரிசனம் | ஒருவர் | காலை 5-30 | வெள்ளி | ரூ. 100/- |
| 9. | ஆடைஅலங்கார சேவை | இருவர் (கணவன்-மனைவி) | காலை 3-30 | வெள்ளி | ரூ.12,250/- |
| | | **வருடாந்திர சேவைகள்/உத்ஸவங்கள்** | | | |
| 1. | பவித்ரோத்ஸவம் | ஐவர் | காலை 8-00 | ஆகஸ்ட் | ரூ. 7500/- |
| 2. | வஸந்தோத்ஸவம் | பதின்மர் | மாலை 2-00 | ஜனவரி | ரூ. 3000/- |
| 3. | புஷ்பயாகம் | ஐவர் | காலை 6-00 | நவம்பர் | ரூ. 3500/- |
| 4. | அபித்யேக அபிஷேகம் | ஐவர் | காலை 8-00 | ஜூன் | ரூ. 2000/- |
| 5. | பத்மாவதி பரிணயம் | ஐவர் | மாலை 3-00 | மே | ரூ. 5000/- |
| 6. | புஷ்ப பல்லக்கு | ஐவர் | மாலை 5-30 | ஜூலை | ரூ. 1000/- |
| 7. | கோயில் ஆழ்வார் திருமஞ்சனம் (உகாதிக்கு முன்னாள், ஆனிவார ஆஸ்தானம், சுவாமி பிரம்மோத்ஸவம் மற்றும் வைகுண்ட ஏகாதசி) | பதின்மர் | காலை 11-00. | வருடத்திற்கு நான்குமுறை | ரூ. 3000/- |
| 8. | தெப்போத்ஸவம் | ஐவர் | மாலை 6-00 | வருடத்திற்கு 5 நாட்கள் | ரூ. 2500/- (ஒருநாள்) |

மேலும் தகவல்களுக்கு அணுகவும்: 79277, 77777 Ext.3679 மற்றும் 3589

(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

## மோட்ச ஸந்நியாச யோகம்

உமைபரியன்

ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச
கார்யாகார்யே பயாபயே ।
பந்தம் மோக்ஷம் ச யா வேத்தி
புத்தி: ஸா பார்த்த ஸாத்விகீ ॥ (30)

"பார்த்தா! பிரவிருத்தியையும் நிவிருத்தியையும், செய்யக்கூடியனவையும், செய்யக்கூடாதவையும், அச்சத்தையும், அச்சமில்லாதன்தையும், பந்தத்தையும், முக்தியையும் அறியும் அறிவே சத்துவ அறிவாகும்."

[உலகாயுத - அதாவது இம்மை வாழ்வுக்குரிய இன்பங்களை, ஆசைகளை அடைவதற்கு மேற்கொள்ளப்படும் வினைகளே - செயல்களே பிரவிருத்தியாகும். இதற்கு நேர் மாறாக முக்தி எனும் மறுமை வாழ்வுக்குரிய ஆன்மிக வினைகளை மேற்கொள்ளுதல் நிவிருத்தியாகும். எது உலக நன்மைக்கு உதவிடும் செயல்கள், எவை தீமைக்கு வழிவகுத்திடும் செயல்கள் என்று எண்ணிப்பார்த்து கடமைகளை மேற்கொள்வது பகுத்தறிவு ஆகும். இது மனிதனுக்கு மிகவும் தேவையாகும். வீட்டின் ஊரின் நாட்டின் இறுதியாக உலகின் மேன்மைக்கு இப்பகுத்தறிவு வழிகாட்டிடும். அஞ்ச வேண்டியவற்றிற்கு அஞ்சுதலே அறிவின் பயனாகும். அதே போன்று சமுதாய மேன்மைக்கு மனித நேயத்திற்கு வழிகாட்டிடும் கடமைகளைக் கண்டு அஞ்சுவதும் தகாது. அப்போதுதான் எளியோரும் பெண்களும் சுதந்திரமாக மகிழ்ச்சியாக இம்மண்ணில் உலவிடமுடியும். மேலும் பிறவிப் பிணியினை நல்கிடும் விஷயங்களை ஒதுக்குவதும், மோட்ச இன்பத்திற்கு வழிகாட்டிடும் ஈனப் பிறவி யில்லா பெரும் பயனைத் தந்திடும் விஷயங்களை மேற்கொள்வதும் அறிவுடையவனின் செயலாகும். இதுவே சத்துவ அறிவு என்பதாகும்.]

யயா தர்மமதர்மம் ச கார்யம்
சாகார்யமேவ ச
அயதாவத் ப்ரஜானாதி புத்தி:
ஸாபார்த்த ராஜஸீ ॥ (31)

'பார்த்தா! தர்மத்தையும் அதர்மத்தையும், தக்க காரியத்தையும், தகாத காரியத்தையும் உள்ளபடி அறியாமல் தாறுமாறாக எந்த அறிவு எண்ணுகின்றதோ அந்த அறிவு ராஜஸ அறிவாகும்."

[ராஜஸ குண ஈடுபாட்டினால் எந்த அறிவு செயல்படுகிறதோ



அந்த அறிவு ராஜச அறிவாகும். இந்த அறிவு உடையவன் குழப்பத்தின் இருப்பிடமாக விளங்குவான். உழைப்பு அதிகமாக இவன் உழைத்தாலும், அவனிடம் நேரமையோ, நாணயமோ காணமுடியாது. இதனால் அவன் நல்லனவற்றை தீயனவாகவும் தீயனவற்றை நல்லனவாகவும் எண்ணி செயல்படுவான். தான் சுகமாக வாழ்ந்திட, தன்னை உணர்வால், பிறருடைய புகழை, உழைப்பை, செல்வத்தை தனக்குச் சொந்தமாக்கிடவே விரும்புவான். இதனால் அவன் மேற்கொள்ளும் உழைப்போ மிகவும் அதிகமானது. இவனிடம் இறைபக்தி என்பது காணமுடியாது. சமுதாய நலனைப் பற்றி சிறிதும் துன்பப்படமாட்டான். பிறர் துன்பத்தில் ஆனந்தம் காண்பான். இவ் ராஜஸ அறிவின் உறைவிடமாக துரியோதனன் திகழ்வதைக் காணலாம்.]

**அதர்மம் தர்மமிதி யா மன்யதே தமஸாவ்ருதா ।**
**ஸர்வார்த்தான் விபரீதான்ஸ் ச புத்தி: ஸா பார்த்த தாமஸீ ॥ (32)**

"பார்த்தா! அறியாமை எனும் இருளால் மூடப்பெற்ற அறிவானது அதர்மத்தைத் தர்மமாகவும், நல்லனவற்றை வித்தியாசமாகவும், விபரீதமாகவும் எந்த அறிவு எண்ணுகின்றதோ அந்த அறிவு தாமச அறிவாகும்."

[மனம் மற்றும் அறிவு மயக்கத்தில் மூழ்கியிருப்பது தாமச அறிவாகும். இந்த அறிவு நல்லது கெட்டது, நியாயம் அநியாயம் என்பதை பகுத்தறியும் ஆற்றல் இல்லாதது. மேலும் தீயோரையே நல்லவராக மயங்கி எண்ணும் இயல்புடையது. எப்போதும் தீயவற்றையே எண்ணி, தீய செயல்களையே விரும்பி, தீயோரிடையே நட்பு கொள்வது இவ் அறிவின் பலவீனமாகும். சமுதாயத்தில் அஞ்சப்படும் தீய குணங்களின் இருப்பிடமாக இவ் அறிவு உடையவன் விளங்கிடுவான். வீண் பேச்சு, விஞைக் காலத்தைப் போக்குதல் ஆகியவற்றில் அதிகம் நாட்டம் கொள்வான்.]

**த்ருத்யா யயா தாரயதே மன: ப்ராணேந்த்ரியக்ரியா:**
**யோகேனோவ்ய பிசாரிண்யா த்ருதி: ஸா பார்த்த ஸாத்விகீ ॥ (33)**

"பார்த்தா! யோகப்பயிற்சியின் உதவியால், தளராத உறுதியினால் யார் ஒருவன் மனம், பிராணன் பொறிகளை காக்கின்றுனோ, அவனுடைய அந்த அறிவே சாத்துவிக உறுதியாகும்."

[திருதி என்றால் மனமும், அறிவும், ஆற்றலும் சேர்ந்து ஒரு முனைப்புடன் இருந்திடும் நிலையாகும். இதனை மனத்திட்பம் என்பர். இந்த மன உறுதியானது தத்துவ குண இயல்புகளுடன் சேர்ந்திருக்கும்போது மனமோ-உள்ளமோ குழம்புவதில்லை. உறுதியுடன் விளங்கிடும். ஒரு முனைப்பு அல்லது மன உறுதி ஒருவனுக்கு யோகப்பயிற்சியினால் எளிதில் பெறப்படும். இந்த மன உறுதியினால் அலைபாயும் மன எண்ணங்களை ஒரு கட்டுக்குள் வைத்திருக்கும். மற்றும் பிராணனையும், ஐம்புலனகளையும் ஒழுங்குபடுத்திடும. இதனால் மனிதன் உயர்நத நெறியில் விளங்கிட ஏதுவாகும். இதனையே இவ் 'சாத்துவிக உறுதி' அளிக்கின்றது.]

**யயா து தர்மகாமார்த்தான் த்ருத்யா தாரயதே அர்ஜுன**
**ப்ரஸங்கேன பலாகாங்க்ஷீ த்ருதி: ஸா பார்த்த ராஜஸீ ॥ (34)**

'பார்த்தா! எநத உறுதியால் அறம், பொருள், இன பங்களை காததிடுகின்றுனோ' எந்த உறுதியால் தன் செயல்களின் (வினைகளின்) பயன்களை அனுபவிக்க விரும்புகின்றுனோ அந்த உறுதியே ராஜஸ உறுதியாகும்."

[அறம், பொருள், இன்பம், வீடு எனும் நான்கும் புருஷார்த்தங்கள் எனப்படும். இவற்றில் முதல் மூன்றின் மீது உலகாயுத ஆசைகளுக்க்ாக மனிதன் அதிகமாக பற்று வைத்திருக்கின்றுன். பதவி, பொருள் அடைய தன்னையே வருத்திக்கொண்டாவது செயல்பட முனைகின்றுன். உற்றூர், உறவினர், வீடு, நாடு என்பவற்றைவிட பொருள், பதவி மீதுள்ள மோகத்தின் வீர்யத்தை, இன்றைய இளைஞர்கள் பொருள் ஈட்ட அயல்நாடுகளுக்கு பொறியியல், மருத்துவ சம்பந்தமான பதவிகளை நாடி ஓடுவதிலிருந்து தெரிந்து கொள்ளலாம். இவற்றினை அடைய ஒருவர் மேற்கொள்ளும் மன, உடல் உறுதியே ராஜஸ உறுதியாகும். இந்த உறுதி மனிதனை மேலும் உலகப்பற்றினிலேயே உழல வைக்கின்றது.]

**யயா ஸ்வப்னம் பயம் சோகம் விஷாதம் மதமேவச ।**
**ந விமுஞ்சதி துர்மேதா த்ருதி: ஸா பார்த்த தாமஸீ ॥ (35)**

"பார்த்தா! எந்த உறுதி கொண்டு ஒருவன் தூக்கம், அச்சம், துயரம், மனக்கலக்கம், செருக்கு ஆகியவற்றின் மீது சிறிதும் தளராது நாட்டம் மிகக்

கொள்கின்றனோ அந்த உறுதியே தாமஸ உறுதியாகும்."

[ஒருவரிடம் அவருடைய பாட்டனாரோ, தந்தையாரோ விட்டுச் சென்ற ஆஸ்தி நிறைய இருக்கும். ஆனால் அப்பொருளை பாதுகாத்திடவோ வளர்த்திடவோ வழி தெரியாது விழித்திருப்பர். மேலும் அப்பொருள் தம்மை விட்டுப் போய்விடுமோ என்ற பயம் ஒவ்வொரு வினாடியும் அவனை வாட்டி வதைக்கும். அப்பொருளை மேலும் பெருக்கத் தெரியாமல் வீணாக சிறிது பொருளை செலவழித்து, நட்டம் கண்டு மனக்கலக்கமும் சிலர் அடைவதும் உண்டு. இந்த நிலையிலும் அவர்கள் தங்கள் செல்வச் செழிப்பினைக் கண்டு மமதையுடனே திரிவர். ஆகவே இந்த உணர்வுகளின் மீதே அதிக உறுதியுடன் விளங்கிடும் இவர்கள் தாமஸ உறுதி கொண்டவர்களாவர். இத்தகு நபருக்குச் சிறந்த உதாரணமாக அறியாமையின் இருப்பிடமாகவும், அச்சம், துயரம், மனக் கலக்கம், மனச் செருக்கு ஆகியவற்றின் இருப்பிடமாக திருதராஷ்டிரன் விளங்குகின்றான்.]

ஸுகம் த்விதானீம் த்ரிவிதம்
ச்ருணு மே பரதர்ஷப ।
அப்யா ஸாத்ரமதே யத்ர
து:காந்தம் ச நிகச்சதி ॥ (36)

"ஒருவன் எந்தப் பயிற்சியால், முயற்சியால் இன்பத்தை அனுபவித்து இறுதியில் துன்பத்தை அடைகின்றானோ, அந்த இன்பத்தின் மூன்று வகைகளையும் என்னிடம் கேட்பாயாக!"

[மனிதன் தன் பிறப்பினை இன்பத்தைத் துய்த்தலுக்காகவே உள்ளது என்று நினைக்கின்றான். உணவிலும், உறக்கத்திலும், வீட்டிலும் ஊரிலும் காணும் பொருளிலும் இன்பத்தை மனிதன் நாளும் அனுபவிக்கவே விரும்புகின்றான். இவ் இன்பத்தின் முடிவு என்னவோ துன்பத்திற்கே இட்டுச்செல்வதாகும். இருப்பினும் நிலையிலா இன்பத்தினையே மனிதன் நாடி ஓடுகின்றான். மனிதன் இவ் இன்பத்தினை வாழ்க்கை முழுவதும் பருகவே நினைக்கின்றான். இன்பம் சிறிது காலம் இருந்து உடனடியாக மறைந்துவிடுகின்றது. மறைந்த இன்பத்தை தொடர்ந்து அனுபவித்திட மனிதன் மீண்டும் முயற்சிக்கின்றான் ஆகவே அனுபவித்திடும் இன்பத்தில் ஏற்றத் தாழ்வுகள் ஏற்படுவதற்கு முக்குணங்களின் தாக்கமே பெரிதும் காரணமாகின்றன. அதனால் இன்பமானது மூவகையாக அமைகின்றது.]

யத்த தக்ரே விஷமிவ பரிணமே
அம்ருதோபமம் ।
தத்ஸுகம் ஸாத்விகம் ப்ரோக்த-
மாத்ம புத்தி ப்ரஸாதஜம் ॥ (37)

"எது முதலில் கடுமையான விஷமாக அனுபவிக்கப் பெற்று இறுதியில் அமிர்தமாக அனுபவிக்கப்படுகிறதோ, எது ஆத்மாவில் நிலைபெற்று தெளிந்த புத்தியால் தோன்றுகின்றதோ அந்த அனுபவிக்கப்படும் இன்பமே சாத்விக இன்பமாகும்."

[கடுமையான முயற்சியியால் எடுக்கப்படும் நல்ல வினைகளின் இன்பம், ஆரம்பத்தில் நஞ்சாகவே அமையும். ஆனால் இறுதியில் அதன் பயன் அமுதமாக இனித்திடும். ஒருவன் மிதி வண்டியினைப் பயில ஆரம்பிக்கும்போது நிலைதவறிக் கீழே விழுந்து உடம்பில் காயம் ஏற்பட்டு, கற்பதே துன்பமாக அமைவதுண்டு. ஆனால், வண்டியினை நன்றாக மிதிக்கத் தெரிந்திட்டபோது இருகைகளை விட்டுக்கூட, அவ்வண்டியினை விரைவாக, எளிதாக ஓட்டிடும்போது தன்னை ஒரு வீரனாகக் காட்டிக்கொண்டு மகிழ்ச்சியின் உச்சியில் மிதப்பதையும் காணுகின்றோம். அது போன்றே, இறை உண்மையை அறிந்திட மனிதன் தியானம், தவம், யோகம் எனும் உடல் உள்ள பயிற்சியினை மேற்கொள்ளும்போது அவை அவனுக்கு துன்பத்தையே நல்கிடும் வகையில் விளங்கிடும். ஆனால் அந்த இறை உண்மையை தெரிந்து கொள்ளும் போது, ஆத்மானுபவத்தை பருகிடும்போது அந்த பயிற்சிகளே அவனுக்கு இன்பமாக விளங்கிடும். இதுவே சத்துவ இன்பமாகும். இந்த இன்பம் ஆத்மாவிலிருந்து தேர்ந்த பேரறிவிலிருந்து தோன்றிடும்.]

விஷயேந்த்ரியஸம் யோகாத்-
யத்தத்க்ரே அம்ருதோபமம் ।
பரிணாமே விஷமிவ தத்ஸுகம்
ராஜஸம் ஸ்ம்ருதம் ॥ (38)

"ஐம்புலன் சேர்க்கையினால் முதலில் அமுதமாக அனுபவிக்கப்பட்டுப் பிறகு இறுதியில் நஞ்சு போன்று வெறுக்கப்படும் இன்பமானது ராஜஸ சுகமென்று கூறப்படுகிறது."

[மனிதன் சிற்றின்பமே பிறவியின் பயன் என்று கருதி இளமையில் காமக் கேளிக்கைகளில் தன் இளமை, செல்வம், தகுதி, பதவி ஆகியவற்றைப் பயன்படுத்தி, உள்ள சுகம் காணுகின்றான். அதுவே பேரமுதமாக அவனுக்குப் படுகிறது. ஆனால் முதுமை நெருங்கும் காலத்து, உடல் சோர்வடைந்துவிட்டபோது, உள்ளம் மட்டும் தான் இளமையில் அனு

பவித்த இன்பத்தை அனுபவிக்க அலைபாய்ந்தாலும், அதனைப் பெற முடியாமல், வாழ்க்கையை பொருளற்றதாக எண்ணியும், உலகத்தையே வெறுத்திடும் நிலைக்குத் தள்ளப்பட்டும், புலன்கள் தங்கள் செயல்களை செய்யாத நிலையில் வாழ்க்கை அவனுக்கு நஞ்சாக மாறிவிடுகிறது.]

*யதக்ரே சானுபந்தே ச ஸுகம்*
*மோஹனமாத்மன:*
*நித்ராலஸ்யப்ரமா தோத்தம்*
*தத்தா மஸமுதா ஹ்ருதம் ॥ (39)*

"ஆரம்பத்திலும், முடிவிலும் மயக்கத்தை உண்டாக்கிடும் இன்பமே, தூக்கம் சோம்பல், தடுமாற்றம் ஆகியன தரும் இன்பமே தாமஸ இன்பமாகும்."

[எப்பேறபட்டாவது இன்பத்தைக் காண வேண்டும், எதனையும் அனுபவித்திட வேண்டும் எனும் மோக மயக்கத்தால் ஏற்படும் சுகம் ஒருவனின் அறியாமையிலிருந்து ஏற்படும் தன்மையாகும். அந்த மயக்கத்தில் ஆழ்ந்து கிடக்கும்போது அவன் தன்னையே மறக்கின்றான். அதுபோது அவனுடைய அழகு, தகுதி, கல்வி பதவி, இளமையாவும் ஏளனத்திற்கும், அருவருப்புக்கும் ஆளாகின்றன. மயக்கம் நீங்கியபிறகு. அனுபவித்த வினைமுயற்சியால் மனக் குழப்பம், சோம்பல், தூக்கமே அவனுடன் இறுதிவரை இருந்துவிடுகிறது. தமோ குணங்களினால் இந்த நிலைக்கு தள்ளபடும் இன்பமே தாமச சுகமாகும். உதட்டைக் காயப்படுத்தி ரத்தம் வழியச்செய்தாலும் முட்களை தொடர்ந்து சுவைத்திடும் ஒட்டகத்தைப் போன்று விளங்கிடும் ஒரு குடிகாரனின் நிலையே இந்த சுகத்திற்கு சரியான உதாரணமாகும்.]

*ந ததஸ்தி ப்ருதிவ்யாம் வா திவி*
*தேவேஷு வா புன:*
*ஸத்வம் ப்ரக்ருதி ஜைர்முக்தம்*
*யதேபி:ஸ்யாத் த்ரிபிர்குணை: ॥ (40)*

"இயற்கையால் தோன்றிடும இந்த மூன்று வகையான குண இயல்புகளிலிருந்து - விடுதலை அடையப்பெற்ற உயிரகள் இந்த மண்ணிலோ அந்த விண்ணிலோ இல்லை"

[இங்கே பகவான் இந்த சத்துவ, ரஜோ, தமோ குணங்களின் ஆற்றலை குறிப்பிட்டுக் காட்டுகின்றான். இயற்கையால் பெறப்படும் இக்குணங்களுக்கு அடிமையானவரகள் சாதாரண மனிதரகள் மட்டுமல்ல மக்கள் போற்றிடும் தேவரகளும் விதிவிலக்கல்ல. தகுந்த குணப்பயிற்சியால் மட்டுமே, நல்ல உறவுகளால் மட்டுமே மனிதன் தன்னுள் சத்துவ குணங்களை ஏற்படுத்திக்கொள்ளமுடியும்.]

(தொடரும்)

## பன்னிரு திருமுறைகள்

திருஞானசம்பந்தர் தேவாரம் : 1,2 ,3 -ஆம் திருமுறைகள்.

திருநாவுக்கரசர் தேவாரம் : 4,5,6-ஆம் திருமுறைகள்.

சுந்தரமூர்த்தி தேவாரம் : 7-ஆம் திருமறை.

மாணிக்கவாசகரின் திருவாசகமும் திருக்கோவையாரும் 8-ஆம திருமுறை.

ஒன்பது ஆசிரியர்கள் அருளிய திருவிசைப்பாவும், சேர்ந்தனார் அருளிய திருப்பல்லாண்டும் 9ஆம் திருமுறை.

திருமூலர் அருளிய திருமந்திரம் 10ஆம் திருமுறை.

திருவாலவாயுடையார், காரைக்கால் அம்மையார், ஐயடிகள் காடவர் கோன் சேரமான் பெருமான், நக்கீரர கல்லாட தேவநாயனார, கபிலதேவநாயனார், பரணதேவ நாயனார், இளம்பெருமான் அடிகள் அதிரா அடிகள், திருவெண்காடடிகள் (பட்டினத்தார்) நம்பியாண்டார் நம்பி ஆகிய பல ஆசிரியர்கள் அருளிய பல நூல்கள் 11-ஆம் திருமுறை.

சேக்கிழார் திருத்தொண்டர் புராணம் 12-ஆம் திருமுறை.

தொகுத்தவர்: கமலா மாரியப்பன் - கோவை.

# படகோட்டியின் பரம பக்தி

டாக்டர் ஏ.கு. திருவேங்கடம் - பொதட்டூர்பேட்டை.

ஒவ்வொரு மனிதனுக்கும் ஏதேனும் ஒரு பொருளின் மீதோ, ஒரு நபரின் மீதோ தொடக்கத்தில் விருப்பம் ஏற்படுகின்றது. அது பெருகிப் பெருகி ஆசையாகவும், அன்பாகவும், பக்தியாகவும் வெளிப்படுகின்றது.



ஆசை என்ற சொல் அன்பு என்னும் சொல்லுக்கு மாறுபட்டது. ஒருவனிடமுள்ள பொருள் மீது ஒருவன் ஆசைப்படுகின்றான் என்றால் என்ன பொருள்? அந்தப் பொருளை எப்படியும் தான் பெறவேண்டும் என்று நினைத்து அதனை தன்னுடைமையாக ஆக்கிக் கொள்ள நினைக்கின்றான். அதற்காகக் களவு செய்யவும், பொய் சொல்லவும் தயங்குவதில்லை. இறுதியில் எண்ணற்ற துன்பங்களுக்கு ஆளாகி தண்டனைக்கு உள்ளாகின்றான். ஆகவேதான் 'துன்பத்தை ஒழிக்க ஆசையை அகற்ற வேண்டும். ஆசையே துன்பத்திற்கு வித்து' என்று போதிமரத்து புத்தனின் ஞானத்தெளிவு குறிப்பிடுகின்றது. இதையே திருமூலர் தம் திருமந்திரத்தில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே

"ஆசை அறுமின்கள் ஆசை
அறுமின்கள்
ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள்
ஆசைப்படப்பட ஆய்வரும்
துன்பங்கள்
ஆசைவிட விட ஆனந்தமாமே"

என்று குறிப்பிடுகின்றார்.

"ஆசை பிறன் பொருளை எடுக்கும். அது சுயநலப் போக்கு. அன்பு பிறற்கு எதையும் தரமுன்வரும். இது பொதுநலப்போக்கு. அன்பின் பெருக்கு பக்தியாக மலரும் இறைவனிடம நாம் தொடக்கத்தில் செலுத்தும் அன்பு பெருகிப் பெருகிப் பக்தியாக வெளிப்படும். பக்தி என்பது வடச்சொல். அன்பு என்பது தென்சொல் என்பாரும் உண்டு. இறைவனை அடைய அவன் மீது செலுத்தும் அன்பு ஒன்றால்தான் முடியும்."

"அன்பெனும் பிடியில் அகப்படும் மலையே" என்பார் வள்ளல் பெருமான். 'பக்தி வலையில் படுவோன் காண்க' என்கிறார் மாணிக்கவாசகர். பக்தி செலுத்தும் எவருக்கும் கருணை வள்ளலான இறைவன் அருள் புரிகின்றான். கல்லாதார், கற்றவர், அரசன், ஆண்டி, மேற்குலத்தோர், தாழ் குலத்தோர் ஆகிய எவரும் பக்தி செய்தால் முக்தி பெறலாம்.

"ஆன பயபக்தி வழிபாடு பெறு
முக்தி அது
வாக இகழ் பக்த ஜந வாரக்காரனும்"

என்பது அருணகிரியார் வாக்கு.

கஜேந்திரன் என்ற யானை, ஆதிமூலமே! ஆதிமூலமே! என்ற ழைத்து முதலை வாயிலிருந்து மீண்டது. திருக்காளத்தியில் பாம்பு, சிலந்தி, யானை பக்தி செய்து பகவான் அருளைப் பெற்றுள்ளது. வேடுவ குலத்து திண்ணனின் ஆறுநாள் இறை அன்பு கண்ணப்பா நீ என் கண் ணப்பா" என்று இறைவனின் அழைப்பு பெறும் வாய்ப்பு தந் தது.

கங்கைக் கரையில் படகோட் டியாக வாழ்ந்த குகன் என் னும் மீனவன் மகாவிஷ்ணுவே ஸ்ரீராமவதாரம் செய்துள்ளதை அறிந்தான். அவரை நேரில் சந்தித்து அவர் பாதகமல மல ரைத் தொட்டு பாத பூசை செய்ய வேண்டி அல்லும் பக லும் பிரார்த்தித்து வந்தான். அவன் விருப்பம் நிறைவேறும் காலமும் வந்தது. ஆம், உண்மை பக்தனின் பிரார்த்த னையை விட சிறந்தது இந்த உலகில் வேறு இல்லை. அல் லவா?

இராமச்சந்திரமூர்த்தி இளைய பெருமாளுடன் சென்று சித் தாசிரமத்தில் வேள்விக்காவல் புரிந்து, பரமஞானியாகிய ஜன கருடைய அழைப்புக்கிணங்கி மிதிலாபுரிக்கு அருகில் வந்தார். வழியில் ஒரு நதிகுறுக்கிட்டது. அக்கரைக்குப் போக வேண்டு மென்ற அக்கறையினால் இரா மரும், லட்சுமணரும், விசுவா மித்திரரும் திகைத்து நின்றார் கள்.

கரிய உருவத்துடன் ஒரு பட கோட்டி அவர்களுக்கு முன்னே வந்து நின்றான். "நீ யாரப்பா?" என்றார்கள்.

"நான் வீரப்பன்; படகோட்டி. இந்த நதியில் படகு விட்டுக் கொண்டிருக்கிறேன் என்பெயர் குகன்" என்றான்.

தேடப்போன மருந்து தெரு வில் கிடைத்தது போல் அவர் கள் மகிழ்ந்தார்கள்.

"அப்பனே! படகு ஆயத்த மாக இருக்கிறதா?"

"ஆம். தயாராக இருக்கி றது."

"உன் படகில் எத்தனை பேர் ஏறலாம்?"

"அறுபது பேர் ஏறலாம்."

"நாங்கள் அக்கரைக்குப்போக வேண்டும். இப்பொழுது ஓடத் துக்கு எத்தனை பேர் சேர்ந்தி ருக்கிறார்கள்?"

"நீங்கள் மூவர் மட்டும்தான் இருக்கிறீர்கள்."

"மேற்கொண்டு 57 பேர்கள் சேர்கிற வரையிலும் நாங்கள் காத்திருக்கவேண்டுமா? எங் களுக்காக மட்டும் ஓடத்தைச் செலுத்தலாமா?"

"நீங்கள் மூவரும் மும்மூர்த்தி களுக்குச் சமமானவர்கள். உங் கள் மூவருக்காக மட்டும் ஓடத் தைச் செலுத்துவேன்."

"அப்பனே! 60 பேர்களுக்கும் உரிய கட்டணத்தை நாங்கள் செலுத்திவிடுகிறோம்."

"ஐயன்மீர்! உங்கள் ஆசிர்வா தம் ஆயிரம் பொன் பெறுமே! காசு பெரிதா? உங்கள் ஆசி தான் பெரிது. நீங்கள் மூவரும் ஓடத்தில் ஏறுங்கள். உங்களுக் காகத் தனியே படகுச்செலுத் துவேன்."

விசுவாமித்திரர் முதலில் ஓடத்தில் ஏறினார். இரா மர் ஓடத்தில் ஏற முயன்றார். அந்த படகோட்டி, "ஏ பச்சை! பச்சை! கடவுள் மேல் ஆனை. காலை படகில் வைக்காதே!" என்று உரத்த குரலில் கூறி னான். இதைக் கேட்டு லட்சு மணருக்குச் சீற்றம் கொதித்தெ ழுந்தது.

"மூவரும் ஏறினால் மும்மூர்த் திகள் ஏறியதுபோல்" என்றான்.

"இப்பொழுது சக்கரவர்த்தித் திருமகனைப் பார்த்து, 'பச்சை! பச்சை என்று அலட்சியமாகச் சொல்லி ஓடத்தில் ஏற வேண் டாம் என்கிறான். இவனை அறைந்துவிட்டு நானே ஓடத் தைச் செலுத்துவேன்" என்றார்.

இராமர், "தம்பி! இந்த ஓடத்தை இவன் பரம்பரை யாகச் செலுத்திக்கொண்டிருக்கி றான். பச்சையாக இருக்கிற என் னைப் பச்சை என்று அழைத் ததனால் என்ன பிழை? உள் ளதைச் சொன்னால் உடம்பெ ரிச்சலா? பொறுமை பெருமை தரும்."

"அப்பா! படகோட்டியே! நான் ஏன் ஏறக்கூடாது?"

"ஐயனே! தாங்கள் படகில் ஏறச் சம்மதிக்க மாட்டேன். என் னைக் கண்டு சீருகிற இந்தச் சின்ன ஐயா ஏறட்டும். தாங்கள் மட்டும் ஏறக்கூடாது."

"படகோட்டிக்காரனே ஏன் என்னை வரக்கூடாது என்று சொல்லுகிறாய்?"

"ஐயனே! தாங்கள் யார்?" என்று மீனவன் கேட்டான்.

இராமர், "அப்பா! இந்த உலகை ஆளுகின்ற அரசர் பெரு மான் யார்? என்று உனக்குத் தெரியுமா?"

"நன்றாகத் தெரியும். அவர் தசரத சக்கரவர்த்தி. புதிய

வரி போடமாட்டார். இருக்கிற வரியை உயர்த்த மாட்டார். அவர் தயாசாகரம்"

"அப்பனே! அந்தத் தசரத ராஜகுமாரன்தான் நான். இவன் என் சகோதரன். என் பெயர் இராமன். இவன் பெயர் இலட்சுமணன்.

இதைக்கேட்ட மீனவன் இராமருடைய திருவடிகளில் அடியற்ற மரம் போல் வீழ்ந்தான. கைகூப்பித் தொழுது, "சக்கரவர்த்தியின் திருக்குமாரரே! தங்களை இன்னார் என்று அறியாமல் கேட்டேன். தங்களுக்கு ஒரு கோடி நமஸ்காரம். தாங்கள் பாதத்தை மட்டும் ஓடத்தில் வைக்க வேண்டாம்".

இராமர் புன்னகை செய்து, "அப்பனே நான் ஏறினால் உனக்கு என்ன குறை உண்டாகும்?" என்றார்.

படகோட்டி, "எம்பெருமானே! தாங்கள் வருகிற வழியில் ஒரு கல் இருந்தது. நான் இளமையில் சருககாம் பாறையாக விளையாடியதுண்டு. அதில் தாங்கள் கால் வைத்தவுடன அந்தக் கல் பெண்ணாகிவிட்டது. இந்த ஓடத்தில் கல்லும் மரமும் இரும்பும் இருக்கின்றன. தாங்கள கால் வைத்தவுடன் இந்த ஓடம் பெண்ணாகிவிட்டால் நான என்ன செய்வேன்? இந்த ஓடதனத வைத்துத்தானே குடும்பத்தை நடததுகிறேன்?" என்றான்.

இராமர் அவனைப பார்ததுச் சிரித்து, "நாங்கள அந்த கரைக்குப் போக வழி சொல்" என்றார்.

படகோட்டி, "எம்பெருமானே! இநத நதிநீரில் தஙகள காலை அலம்பிவிடுங்கள். கல்லைப பெண்ணாக்குகிற அந்த மருந்து, தண்ணீரில் கரைந்துவிடும். பிறகு ஏற்றிக்கொள்வேன்" என்றான்.

இராமர் தண்ணீரில் கால் அலம்பிச் சென்றார். படகோட்டி, "ஐயனே! கால் மீது கால் வைதது்த் தேய்க்கக் கூடாது என்பதைத் தாங்கள் அறிந்திருப்பீர்களே? கால் அலம்பும் பணியை எனக்குக் கொடுங்கள். நான் நன்றாகத் தேய்த்து அலம்பிவிடுவேன்" என்றான்.

இராமர், "அலம்பிக்கொள்" என்றார். படகோட்டி, செப்புத் தாம்பளத்தில் இராமர் திருவடியை வைத்து நதிநீரை முகந்து பெருமான் திருவடியில் அபிஷேகம் செய்து மலர்களினால் அர்ச்சனை செய்து அழுது தொழுது, "இராமா! இராமா!" என்று பாடினான், ஆடினான். "ரகுவீரா! இராமச்சந்திரப் பிரபோ! உன் பாதபூசைக்கு பாரத்வாஜர், சரபங்கர், தண்டகவனத்துத் தவமுனிவர்கள் முதலியோர் பல காலம் தவம் செய்து ஏங்கி கிடக்கத் தவம் செய்யாத இந்த ஏழை படகோட்டிக்குப் பாத பூசை முதன் முதலாகச் செய்யக் கிடைத்ததே! நான் என்ன பாகியம் செய்தேனோ?" என்று துதி செய்து ஆனந்த வெள்ளத்தில் அழுந்தினான்.

இராமர் தம்பியைப் பார்த்து, "தம்பி எனது பாதபூசை செய்வதற்காகத்தான் இவன் என்னை ஓடத்தில் ஏற்ற மறுத்தான். இவன் பரம பக்தன்" என்றார்.

மூவரும் அநத ஓடத்தில் ஏறினார்கள். அந்த மீனவன் இராமநாமத்தைச் சொல்லி, ஓடப்பாடல்பாடி அக்கரை சேர்த்தான்.

ஓடத்தைவிட்டு இராமர் இறங்கியவுடன் தமது திருவிரலில் அணிந்து கொண்டிருந்த நவரத்தின மோதிரத்தை அவனிடம் கொடுக்க வந்தார்.

படகோட்டி, "எம்பெருமானே! நீர் பெரிய ஓடக்காரன். நான் ஓடக்காரன். ஒரு தொழிலாளியிடம் மற்றொரு தொழிலாளி இனாம் வாங்கக்கூடாது" என்றான்.

இதைக்கேட்டு லட்சுமணர், "என் அண்ணா ஓடக்காரனா?" என்று கோபித்தார்.

படகோட்டி, "ரகுவீரா! தாங்கள் பிறவியாற்றினில் வீழ்ந்து தத்தளிக்கிற ஆன்மாக்களை முக்திக் கரையில் சேர்க்கிற பெரிய ஓடக்காரன். அடியேன் இந்த ஆற்றில் ஓடம் விடுபவன். இப்பொழுது நான் தங்களிடம் பரிசு வாங்கினால் என்னைப் பிறவிக் கடலிலிருந்து நாங்கள் முக்திக் கரை சேர்க்கும்பொழுது நான் தங்களுக்குப் பரிசு தரவேண்டும் அல்லவா? இப்பொழுது நான் இனாமாகத் தொண்டு செய்தால்தானே, அப்பொழுது தாங்கள் எனக்கு உதவி செய்வீர்கள்" என்றான்.

அந்த படகோட்டியின் அன்பையும், பண்பையும் கண்டு மூவரும் தேவரும் வியந்து நின்றார்கள். ✤

கம்பராமாயணம் ஒரு சரணாகதி வேதம்

1. தேவ சரணாகதி
2. ரிஷி சரணாகதி
3. சுக்ரீவ சரணாகதி
4. மிருக சரணாகதி
5. காக சரணாகதி
6. திரிசடா சரணாகதி
7. விபீஷண சரணாகதி

திரு. சதயன்-காஞ்சிபுரம்.

# பெருமைமிக்க அருளாளனின் பேரருள்

திரு. தி.அ. ஸ்ரீநிவாஸன் - சின்னகாஞ்சிபுரம்.

அர்ச்சாரூபியாய் கோயில் கொண்டிருக்கும் அனேக க்ஷேத்திரங்களுள் ஆழ்வார்களால் பாடல்பெற்ற 108ஐ திவ்ய தேசங்களாக சிறப்பித்துக்கூறுவது மரபு. இவைகளுள் கோயில், திருமலை, பெருமாள்கோயில் இம்மூன்றும் மிகவும் சிறப்பாகப் போற்றுவது வைஷ்ணவ சம்ப்ரதாயம். எப்படி 'ஆழ்வான்' என்றால் கூரத்தாழ்வானைத்தான் குறிக்குமோ, அப்படியே எல்லா திவ்ய தேசங்களும் பெருமாள் கோயில்கள் தான் என்றாலும் பேரருளாளன் எழுந்தருளியிருக்கும் காஞ்சிதான் 'பெருமாள்கோயில்' என்று சிறப்பித்துக் கூறுவது ப்ரஸித்தம். ஒரு ஊரில் ஒருங்கே பாடல் பெற்ற அனேக திவ்ய தேசங்கள் அமையப்பெற்ற பெருமை காஞ்சிக்கே உள்ளதாலும் "பெருமாள் கோயில்" எனப்பெயர் பெற்றது. எல்லா எம்பெருமான்களும் நம் போலுள்ள பக்தர்களுக்குத்தான் அருள்புரிபவர்கள். பெரிய பெருமாளான அழகிய மணவாளனின் விருப்பத்தை (எம்பெருமானாரை அவரிடம் அனுக்ரஹித்தது) நிறைவேற்றிய ஒப்பற்ற சிறப்பு பேரருளாளன் ஒருவனுக்கே சிறப்பாய் அமைந்தது. அவன் ப்ரஹ்மா யாகத்தில் தோன்றி காஞ்சியில் அவதரித்து நாளது வரையில் புரிந்த அருள்வெள்ளம் எண்ணில் அடங்கா.

தன் அருளால் தான் அவதரித்த க்ஷேத்திரத்தைச் சுற்றிலும் பல ஆழ்வார் ஆச்சாரியர்களை அவதரிப்பிக்கச் செய்தான். முதலாழ்வார்களுள் முதல்வரான பொய்கை ஆழ்வாரை வெஃகாவிலும், பூதத்தாழ்வாரை கடல்மல்லையிலும், பேயாழ்வாரை திருமயிலையிலும், திருமழிசைஆழ்வாரை திருமழிசையிலும், திருக்கச்சிநம்பிகளை பூவிருந்தவல்லியிலும், முதலியாண்டானை பேட்டை என்கிற வரதராஜபுரத்திலும், உடையவரை ஸ்ரீபெரும்பூதூரிலும், எம்பாரை மதுரமங்கலத்திலும், ஆழ்வானை கூரத்திலும் வேதாந்த தேசிகனை காஞ்சியிலுள்ள திருத்தண்கா எனப்படும் தூப்புலிலும் இன்னும் எண்ணற்ற மகான்களையும் தன் பக்கலிலேயே அவதரிப்பிக்கச் செய்து வைஷ்ணவ சமயம பரவுவதற்கு அருள் புரிந்திருக்கிறான். திருக்கச்சி நம்பிகள் மூலம் "அஹமேவ பரம் தத்வம" என்று தொடங்கி பிரஸித்தமான ஆறு வாக்கியங்கள் திருவாய் மலர்ந்தருளினான். அவைகளின் சாரமே முன்கூட்டியே ஆழ்வார்கள் அருளிய பாசுரங்களாய் அமைந்தன. நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழி முதலான பிரபந்தங்கள் அவன் திருவாக்கான பரதத்வ நிர்ணயத்தின் விவரணம்தான். அது பற்றியே நம்மாழ்வார் திருவாய்மொழி தொடக்கத்திலேயே 'அமரர்கள் அதிபதி' என்று தேவாதிராஜனான பேரருளாளனையே மங்களாசாஸனம் செய்கிறார். ஆழ்வார் அடுத்த வரியில் 'தொழுதெழென் மனனே' என்று ஸாதித்தபடிதான் காஞ்சியில் அவர் அர்ச்சாத் திருமேனியாய் ஸேவை ஸாதிக்கிறார்.

ஒருசமயம் திருமங்கை ஆழ்வார் பகவத்பாகவத கைங்கர்யத்திலேயே ஸகல திரவியங்களையும் செலவு செய்து சோழ ராஜனால் சிறை பிடிக்கப்பட்டு 'திரை' (கப்பம்) கட்டி விடுவித்துக் கொள்ளுமாறு நிர்ப்பந்திக்கப்பட, பேரருளாளன் ஆழ்வார் கனவில் தோன்றி காஞ்சி வரும் படி நியமித்து, வேக வதிக் கரையில் நிதியைக் காட்டிக் கொடுத்து மீள்வதற்கு உபகரித்தான். 108 திவ்ய தேசங்களில் 86 அர்ச்சாவதார எம்பெருமான்களை இவ்வாழ்வார் பாடி இருக்கிறார். (47 திவ்யதேச எம்பெருமான்கள் இவர் ஒருவராலேயே பாடப்பட்டவர்கள்) அப்படி இருந்தும் எந்த எம்பெருமானும் இவரின் உதவிக்கு வந்து அருள் புரியவில்லை. பேரருளாளன் மட்டும் தான் அருளிச்செயலில் மிகவும் ஊக்கமுடையவராகையாலும் தன் பெருமைக்குச் சேர இவர் மீது இரக்கம் கொண்டு, உதவி புரிந்தான் போலும்.

வைணவ சமயத்தை வளர்த்த ஆழ்வாராசாரியர்கள் எல்லோரும் அவர்கள் எங்கு அவதரித்து நித்யவாசமாய் தங்கியருந்தாலும் தக்க சந்தர்ப்பங்களில் பேரருளாளனை வேண்டிக் கொண்டு அவரருளால் விசிஷ்டாத்வைதத்தை வளர்த்ததைக் குருபரம்பரையில் பரக்கக் காணலாம்.

ஆளவந்தார் தமக்குப் பின் சமயத்தை வளர்ப்பதற்கு உரியவர் யாரென்று ஆலோசித்துக் கொண்டிருக்கும் தருணத்தில் எம்பெருமானாரைப் பற்றிக் கேள்விப்பட்டு காஞ்சிக்கு உடனே புறப்பட்டு திருக்கச்சி நம்பிகள் மூலம் காணப்பெற்று 'ஆம் முதல்வன் இவன்' என்று கடாக்ஷித்து, பேரருளாளன் ஸந்நிதியில் 'எம்பெருமானாரை நம் தரிசனம் வளர்ப்பவராக ஆக்கித் தரவேண்டும்' என்று விண்ணப்பித்துக் கொண்டு ஸ்ரீரங்கம் எழுந்தருளினார். மீண்டும் சிலகாலம் கழித்து, எம்பெருமானார் யாதவப்ரகாசரோடு உறவறுத்து நம்பக்கம் சேர்ப்பதற்கான வழியை யோசிக்குமளவில் பேரருளாளன்தான் கதியென்று 'முன்வேண்டியதைப் பயனுடையதாக ஆக்கி அருள வேண்டும்' என்று ப்ரார்த்தித்துக் கொண்டார். சிலநாட்களில் காஞ்சிபுரத்திலிருந்து வந்த சில ஸ்ரீவைஷ்ணவர்கள் எம்பெருமானார் கருத்து வேறுபாட்டினால் யாதவப்ரகாசரின் அபார்த்தங்களைக் கேட்கமுடியாமல் விசிஷ்டாத்வைத பரமாகப் பொருள் உரைக்க எம்பெருமானார் தவிர்த்துப் பட்டதாக உணர்த்தினர். அதுகேட்டு ஆளவந்தார் மிக உகந்து, பேரருளாளன் நம் ப்ரார்த்தனையை ஈடேற்றிவிட்டான் என்று கொண்டாடி பெரிய நம்பிகளை அனுப்பி, எம்பெருமானாரை உடனே அழைத்து வரும்படி நியமித்தார்.

எம்பெருமானாருக்கு அவ்வப்பொழுது அருள்பாலித்தது மிகப்பிரஸித்தம்.

(1) வைணவ சமயத்திற்கு முழுநேரமும் செலவிடுவதற்கு பாங்காக காஷாயத்தைத் தானே கொடுத்தருள ராமாநுஜரை யதிராஜனாக்கினான்.

(2) எம்பெருமானாரைக் கொல்ல முயற்சித்து யாத்திரையில் அழைத்துச் சென்ற அளவில் அதுதெரிந்து, தப்பி வழி தெரியாமல் காடுகளில் அவதிப்பட்டுக்கொண்டிருக்கையில் பேரருளாளன் தாயாருடன் கூடி வேடுவனும் வேடுவச்சியுமாய் அவர்முன்தோன்றி உதயமாகும் சமயத்தில் காஞ்சிக்கருகில் சேர்ப்பித்து மறைந்து விட்ட வைபவம் வாசாமகோசரம்.

(3) ஸ்ரீரங்கத்தில் சேர்ந்து நித்யவாசம் செய்து கொண்டிருக்கையில் ஒரு சமயம் யக்ஞமூர்த்தி என்கிற அத்வைத வேதாந்தியுடன் வாதப்போரில் நெடுநாட்கள் ஈடுபட்டு வெற்றி காணாமையால் எம்பெருமானார் மிகவும் வேதனைப்பட்டு அருளாளனை வேண்டிக்கொண்ட அளவில் அருளாளனும் அவருக்கு ஊக்கமூட்டி வெற்றி கொள்ள அருள்புரிந்தான். அருளாளனின் க்ருபையால் வேதாந்தியைத் திருத்தியதால் உடையவர் அவருக்கு அருளாளப்பெருமாள் எம்பெருமானார் என்ற திருநாமமிட்டார்.

(4) எம்பெருமானார் விருப்பத்திற்கிணங்க கூரத்தாழ்வான் பேரருளாளனைத் துதிசெய்து நான் பெற்ற பேறு நாலூரானும் பெறவேண்டும் (தன் கண்போவதற்குக் காரணமாயிருந்த ஸ்ரீவைஷ்ணவருக்கும் மனமிரங்கும் ஔதார்யம்) என்று வரம் வாங்கிவிட, எம்பெருமானார் ஆழ்வான் கண்பார்வைப் பெறுதலைப் பற்றித் துதி செய்யச் சொன்னதும், அது கூடாமல் போக வருந்தியதும், பேரருளாளன் "கலங்கவேண்டா; நம்மையும் உம்மையும் காணுமிடத்துக் கட்கண்ணாலே காணக்கடவர்" என்று அனுக்ரஹித்தார். இப்படியாக ஸ்ரீரங்கத்தில் நித்யவாஸம் செய்துகொண்டு இருக்கும்போதும் பல சந்தர்ப்பங்களில் பேரருளாளனையே ப்ரார்த்தித்து அனுக்ரஹம் பெற்றாரென்றால் அதற்குக் காரணம் பேரருளாளன் ஒருவன் தான். 'வேண்டுவார் வேண்டுவன தருவதையே குணமாக உடையவர்' என்ற திடமான நம்பிக்கைதான் காரணம். அவ்வளவு க்ருபை அழகிய மணவாளனிடம் அவரனுபவத்தில் காணவில்லை. எப்படியெனில் ஆளவந்தாரின் நியமனத்தின்பேரில் ஸ்ரீரங்கத்திற்கு சமீபத்தில் வரும் நேரத்தில் ஆளவந்தாரை ஆட்கொண்டு அவர் கடாக்ஷத்தை நேரில் பெறமுடியாமல் செய்துவிட்டாரே நம்பெருமான் என்று க்லேசித்து, இனிமேல் எங்கிருந்தாலும் பேரருளாளனையே நாடுவோம் என்று திருவுள்ளம் கொண்டார்போலும்.

பேரருளாளனால் அனுக்ரஹிக்கப்பட்ட தேசிகன் வைபவமும் அவர் பேரருளாளனை அனுபவித்த வகையும் சொல்லுக்கு அடங்காதது. ஒரு சமயம் அவர் தோழரான வித்யாரண்யர் இவருக்கு திரவிய சகாயம் செய்யும் பொருட்டு அழைப்பு விட, ஸ்வாமி தேசிகன் தன்னுடைய முன்னோர்கள் தேடி வைத்த அழியாச்செல்வம் அத்திகிரி மலையில் இருக்க, அழியக்கூடிய செல்வம் தனக்குத் தேவை இல்லை என்று பதிலளித்துவிட்டார். தனக்குப் பேரருளாளன் திருவடியிலேயே வாழ்ந்து அவனை மங்களாசாஸனம் செய்வதே புருஷார்த்தமென்றும் வைகுண்டவாஸமும்

தனக்கு ருசியில்லை என்று அறுதியிட்டு சாதிக்கிறார்.

அழகிய மணவாளன் கஸ்தூரி ரங்கனாய் இருப்பது போல், பேரருளாளனும் கஸ்தூரி வரதனாக மணவாள மாமுனிகளுக்குத் தோன்றிவிட, பின்வருமாறு மங்களாசாஸனம் செய்கிறார்.

அஸ்து ஸ்ரீஸ்தன கஸ்தூரீ
வாஸனா வாஸிதோராஸே
ஸ்ரீ ஹஸ்திகிரி நாதாய
தேவராஜாய மங்களம்"

மணவாளமாமுனிகள் ராஜமன்னார்குடி கோபாலனிடம், மிகவும் ஈடுபாடுடையபடியாலும் திருவாய்மொழியில் தீர்ப்பாரையாமினி என்னும் பதிகத்தை அவர் விஷயமாக ஸமர்ப்பித்தபடியாலும் பேரருளாளன் தன் வைகாசித் திருநாளில் திருமூலத்தன்று நடைபெறும் ஆறுவது உத்ஸவத்தன்று காலையில் வேணுகோபாலவரதனாக திருக்கோலம் (சாத்திக்கொண்டு) பூண்டு உபதேசரத்தினமாலையைச் செவிசாய்க்க அமைத்துகொண்டதாக விளங்குகிறது. அதுபோலவே நான்காம் உத்ஸவத்தில் நான்முகன் திருவந்தாதியைச் செவிசாய்ப்பதற்கு உரித்தான பரமபதநாதன் திருக்கோலத்திலும் ஸேவை தந்தருள்கிறான். இப்படி அவன் உத்ஸவங்கள் அருளிச்செயலை அனுசரித்து விளங்குவதாக அமைந்துள்ளதை நாம் எளிதில் உணரலாம்.

பேரருளாளன் தன்னிடம் மிகவும் ஈடுபாடு உடையவரான மணற்பாக்கத்து நம்பியை பிள்ளைலோகாச்சாரியரிடம் அனுப்பித் தன் நியமனத்தை அவருக்கு எடுத்துச்சொல்ல பிள்ளைலோகாச்சாரியாரும் மிக உகந்து அவருக்கு சகலமான பரமரஹஸ்யார்த்தங்களை அனுக்ரஹித்தார். மறுபடியும் பேரருளாளன் நம்பியின் கனவில் தோன்றி பிள்ளைலோகாச்சாரியர் அருளிச்செய்யும் அர்த்தங்களை தாமே நூல்வடிவமாகச் செய்யும்படி அவரிடம் நியமிக்க அவரும் தம் ஆசாரியரிடம் அப்படியே பெருமாள் நியமனத்தைச் சொல்ல பிள்ளைலோகாச்சாரியரும் பெருமாள் ஆணையை சிரஸாவகித்து, உபதேசத்தாலே வழிவழியாக வந்த அர்த்தங்களையெல்லாம் நாதமுனிகள் முதலான மகா ஆசார்யர்களின் அமுத திருவாக்குகளைக்கொண்டே தொகுக்கப்பட்ட பூஷணம் போன்ற நூல் "ஸ்ரீவசனபூஷண"மாய் நம் போல்வோர் உஜ்ஜீவிக்கும் பொருட்டு செய்து தலைக்கட்டினார். இது விஷயமாகவே ஆசார்ய ஹ்ருதயமும் எழுந்தது. ஆகவே பேரருளாளன் நியமனமில்லாவிடில் இவைகளெல்லாம் நமக்கு இவ்வளவு எளிதாய்க் கிட்டியிருக்கும் என்று சொல்லமுடியாது.

சமீப காலத்தில் சோளசிம்மபுரத்திலிருந்த மகான் தொட்டையாச்சாரியர் ஸ்வாமி வருடந்தோறும் வைகாசித்திருநாளில் தேவப்பெருமாள் கருடஸேவையை கோபுரவாசலில் அதிகாலையில் ஸேவிப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார். வ்ருத்தாப்யாசத்திலும் பிடிவாதமாய் கடைபிடித்து வருகையில் ஒரு வருடம் தக்கான் குளக்கரையில் வரும் பொழுது விடிந்துவிடவே அவ்வருட கோபுர வாசல் ஸேவையின் இழப்பை வருந்தி எம்பெருமானை ப்ரார்த்திக்கையில் அந்த க்ஷணத்திலேயே பேரருளாளன் மானஸ ஸாக்ஷாத்காரமாய் கருடாரூடனாய் தொட்டையாச்சாரியர ஸ்வாமிக்கு ஸேவை ஸாதித்தான். இத்தருணத்தில் தான 'தேவாதிராஜ பஞ்சகம்' எனனும் ஸ்தோதரம் அம் மஹானால் தோன்றியது. இதில் ஐந்து துதிப்பாடல்களே உள்ளன. நாம் தேவாதிராஜனின் கருட ஸேவையை நேரில் அநுபவிக்க ப்ராப்தமில்லாத போது, ஒருமுறை கண்ணைமூடிக்கொண்டு இந்த ஸ்தோத்ரத்தை அநுஸந்தித்தோமாகில் நம் கண் முன் தேவாதிராஜன் கருடாரூடனாய் நமக்கு ஸேவை ஸாதிப்பது திண்ணம். இதில் சிறிதும் ஐயமில்லை. அநுபவ ஸித்தமே!

இப்பொழுதும் தக்கான் குளக்கரையில் கருடாரூடனாய் அர்ச்சாரூபியாய் ஸேவை ஸாதிக்கிறார். சோளசிம்மபுரத்தில் அடிவாரத்தில் தேவபிரானும் மலைமேல் அழகியசிங்கரும் ஸேவை ஸாதிக்கிறார்கள். பெருமாள் கோயிலில் அத்திகிரி அடிவாரத்தில் அழகிய சிங்கரும் மலைமேல் அருளாளனும் இடம் மாறியபடி ஸேவை ஸாதிக்கிறான். இதன் தத்துவம் கீழ்க் கண்டவாறு விளங்குகிறது.

'நருஸிம்ம அவதாரத்தின் சிறப்பு அவ்வவதாரத்தின் நோக்கத்தை அந்த க்ஷணததிலேயே தலைக்கட்டி ப்ரஹ்லாதனை அருள்பாலித்ததுபோல், அர்ச்சாவதாரத்தில் பேரருளாளனும் அதே த்வரையில் அருள்பாலிப்பான் என்பதுதான். அதித்வரையில் கஜேந்திர ஆழ்வான் கூக்குரலைக்கேட்டு கஜேந்திரவரதனாக அருள்பாலித்தது ப்ரஸித்தம்.

சிலர் நாலாயிர திவ்ய ப்ரபந்தத்தில் பேரருளாளனை பாடும் பாசுரங்கள் அதிசொல்பமாக இருப்பது அவன் பெருமைக்கு ஏற்றவாறு அமையவில்லையே என்று குறைபடுகிறார்கள். பரக்ருதி தத்வத்தில் எந்த பதார்த்தம் ஏராளமாய் இருந்தாலும் அவைகளை சுவைகூட்டும் பரிமளங்கள் மிகவும் அல்பசொல்பமாய் தான் இருக்கும். அவைகள் அந்த அளவிற்குமேல் போகக்கூடாது. இது பரக்ருதியின் நியதி. இந்த முறையில் நாலாயிர திவ்ய ப்ரபந்தத்தை பரிமளிக்கச் செய்யும் தேவபிரானின் பாசுரங்கள் அதிசொல்பமாய் இருப்பது நியதி. தவிரவும், தேவப்பிரான் அர்ச்சாவதாரத்தில் அருளிச்செயலை செவிசாய்ககவென்றே அவதரித்தவர அப்படி இருக்கையில் தன்னைப் பற்றி அதிகமாகப் பாடிக்கொள்வது அலௌகிகம் என்று திருவுள்ளம் கொண்டு இதர எம்பெருமான்களின் வைபவத்தைப் பாடச்செய்து செவிசாய்ப்பது தான் பொருத்தமும் சிறப்புமாகும் என்று தெளிவுபடுத்தியுள்ளான்.

**இப்படி பேரருளாளன்** பெருமைக்கடலில் சில திவலைகளை ஸ்மரித்துக்கொண்டு நம்மை கருதாரத்தர்களாக ஆக்கிக்கொள்வோமாக!





# திருமலை திருப்பதி தேவஸ்தானம்
## நூல் வெளியீட்டுத்துறை

### தமிழ் மொழியில் வெளிவந்துள்ளவை

| வரிசை எண். | நூலின் பெயர் | விலை ரூ. |
|---|---|---|
| 1. | ஆத்ம போதம் | 29-00 |
| 2. | மஹாபாரதக் கதைகள் | 7-00 |
| 3. | முக்கவிகண்ட காவியம் பகுதி-II | 20-00 |
| 4. | சித்திரத் திருப்பாவை | 15-00 |
| 5. | பகவத் ஸந்தேஷம் | 0-50 |
| 6. | நியாய ஸித்தாஞ்சனம் | 9-00 |
| 7. | அன்னமய்யா சங்கீர்த்தன மஞ்சரி | 10-00 |
| 8. | நித்யாநுஸந்தானம் (வடகலை) | 8-00 |
| 9. | நித்யாநுஸந்தானம் (தென்கலை) | 10-00 |
| 10. | திருவேங்கடமலை வரலாற்றுமாலை | 30-00 |
| 11. | காத்திடும் மங்கள சுலோகங்கள் | 3-00 |

### ஆங்கில மொழியில் வெளிவந்துள்ளவை

| | | |
|---|---|---|
| 1. | A Synopsis of Srimad Bhagavatham | 7-00 |
| 2. | Bhakta Purandra Dasa | 1-25 |
| 3. | Holy Trinity | 1-00 |
| 4. | Prasanna Venkatadasa | 1-50 |
| 5.** | Satguru Thyaga Brahma Pushpanjali | 250-00 |
| 6.** | 108 Vaishnavate Divya Desams Vol.III | 60-00 |
| 7.** | 108 Vaishnavate Divya Desams Vol.IV | 60-00 |
| 8.** | 108 Vaishnavate Divya Desams Vol.V | 70-00 |
| 9. | Urdhavamoola | 12-00 |
| 10. | Vyasarayalu | 0-75 |
| 11. | Visistadvaitha | 10-25 |
| 12. | Vision of Aryan Glory | 1-50 |
| 13. | Nammalvar | 3-00 |
| 14. | Tirumazhisai Alwar | 5-00 |
| 15. | Padmavathi Ammavari Temple | 2-00 |
| 16. | Vasishnava Sampradayam in Tirumala | 1-25 |
| 17. | Srimad Bhagavathgeetha | 20-00 |
| 18. | Gruhavaidyam | 6-00 |
| 19. | History of Tirupati-Vol.I | 37-00 |
| 20. | History of Tirupati-Vol.II | 30-00 |
| 21. | History of Tirupati-Vol.III | 10-00 |
| 22. | Tirumala-Tirupati-Tiruchanoor | 8-00 |
| 23. | Tirupati Sri Venkateswara | 100-00 |
| 24. | T.T.D. Inscriptions Report | 145-00 |
| 25. | T.T.D. Inscriptions Early No. 1 | 100-00 |
| 26. | „ Saluva Narasimhas Time No. 2 | 120-00 |
| 27. | „ Krishna Rayas Time No. 3 | 125-00 |
| 28. | „ Achyutaraya's Time No. 4 | 130-00 |
| 29. | „ Sadasivaraya's Time No. 5 | 150-00 |
| 30. | „ Venkatapati Raya's Time No. 6 | 100-00 |
| 31. | „ Epigraphical Glossary No. 7 | 120-00 |
| 32. | „ The Truth of Hinduism | 12-00 |
| 33. | A Hymn Venkateswara (Venkateswara Suprabhatam) | 10-00 |

### வட மொழியில் வெளிவந்துள்ளவை

| | | |
|---|---|---|
| 1. | அலங்கார சங்க்ரஹா | 16-00 |
| 2. | ப்ரஹ்ம்ம சூத்ர பாஷ்யம் | 30-00 |
| 3. | பாகவத மஹா புராணம் தொகுதி-I | 75-00 |
| 4. | தீதிகா நக்ஷத்ர மாலிகா | 2-50 |
| 5. | கோபால ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் | 5-00 |
| 6. | கபிலேஸ்வரசுவாமி சுப்ரபாதம் | 0-10 |
| 7. | லலிதா ஸஹஸ்ரநாமம் | 28-00 |
| 8. | மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18-00 |
| 9. | சீதாராமஞ்சநேயம் | 50-00 |
| 10. | தத்வ ஸங்க்யானம் | 2-00 |
| 11. | க்ரிஹ்ய சூத்ரஹ தொகுதி-I | 49-00 |
| 12. | க்ரிஹ்ய சூத்ரஹ தொகுதி-II (இரண்டு தொகுதியும் சேர்ந்து) | 45-00 |
| 13. | பாகவத மஹா புராணம் | 100-00 |

குறிப்பு : தி.தி. தேவஸ்தானப் பதிப்பகத்தில் வெளிவந்துள்ள நூல்களை மொத்தமாகக் கொள்முதல் செய்பவர்களுக்கு கீழ்க்கண்டவாறு வாணிபக் கழிவு அளிக்கப்படும்.

1. ரூ. 100லிருந்து 500 வரை வாங்குவோருக்கு 15%
2. ரூ. 501லிருந்து 999 வரை வாங்குவோருக்கு 25%
3. ரூ. 1000லிருந்து அதற்குமேல் வாங்குவோருக்கு 30%

தயவு செய்து நீங்கள் விரும்பும் நூலின் விலை மற்றும் தபால் செலவோடு கேட்பு காசோலையாக "The P.R.O., Sales Wing of Publications, T.T. Devasthanams, Tirupati" எனும் பெயருக்கு எடுத்து இம்முகவரிக்கு அனுப்பவும். V.P.P. இல்லை. D.D. மட்டும் ஏற்றுக்கொள்ளப்படும்.

* அச்சில் ** கழிவு இல்லை.

# வைணவ வழக்குச்சொற்களும் பொருள்களும்

டாக்டர் மா. வரதராஜன் - திருப்பதி.

## ம

மல் - மல்லர்கள்; மிடுக்கு; பெருமை; சாமர்த்தியம்; மிகுதி
மல்க - பெருக
மல்கட்டாகக் கட்டல் - திரிமிப் போகாதபடி கட்டுதல்
மல்கி - நெருங்கி; மிக்கு
மல்கியதோள் - பலதோள்கள்
மல்லகலம் - மிடுக்கையுடைய மார்வு
மல்லமர் - மல்லர் யுத்தம்
மல்லர்கொம்பு - தழைத்த கொம்பு; பெருத்த கொம்பு
மல்லலரியுரு - லக்ஷ்மீ நரசிம்மன்; மல்லல்-செல்வம் அதனால் லக்ஷ்மீ
மல்லல் - ஆரவாரம்; செல்வம்
மல்லன் - செருக்கன்; கர்வமுடையவன்
மல்லாண்ட - மல்லர் வர்க்கத்தை அடிமைகொண்ட
மல்லாரி நடை-மல்லாரி வாத்தியம் - இராப்பத்து திருநாளில் ஸ்ரீரங்கத்தில் பெருமாள் கொட்டகையைச் சுற்றி வேகமாக வரும் நடையும் அப்போதுள்ள வாத்திய கோஷமும்
மல்லிகை வெண்சங்கு - மல்லிகைப்பூவாகிற வெண் சங்கு; அது தலை குவிந்து மேல் பருத்துக் காம்பின் அடிநுட்பமாய் வெளுத்த நிறமாயிருக்கும். அது சங்கு போல் இருக்கையாலே.
மல்லிநாடி - திருமல்லிநாட்டை ஆண்டவள்-ஆண்டாள்
மல்லை - திருக்கடன்மல்லை என்னும் திவ்ய தேசம் மகாபலிபுரம்; பரந்து இருத்தல், சம்பத்து.
மல்லைச்செல்வம் - தனக்குமேலில்லாத செல்வம்
மல்லைமாநகர் - மிக்க செல்வத்தை உடைய ஸ்ரீமதுரை
மலக்குதல் - கலக்குதல்; அழித்தல்
மலக்குண்கை - கடையப்படுகை
மலக்கு நாவுடையேன் - மிகுகளிப்பாலே சுழலப் பண்ணுகிற நாவீறு உடையேன்; உளுக்கப்பண்ணுகிற, அலமாக்கப்பண்ணுகிற நா உடையேன்.
மலங்க - அழிய
மலங்கு - ஒருவகை மீன்
மலங்குகள் விலங்கும் படியான கடல் - உள்ளுக்கிடந்த பொருள்கள் எல்லாம் அங்கே இங்கே தடுமாறும்படியான கடல
மலடன் - மகப்பெருதவன்; களங்க மற்ற சந்திரன்
மலடாய்ப்போதல் - பயனின்றிப்போதல்
மலட்டுக்காலம் - திரேதாயுகம்
மலடுநிற்றல் - பிள்ளையின்றி நிற்றல்
மலமுடையூத்தை - மலத்தையுடைய உடல
மலர்க்கண் - மலர்போன்ற கண்
மலர்க்கண்ணன் - செவ்வித்தாமரைபோலே மலர்ந்த திருக்கண்களை உடையவன்
மலர்க்கண்ணர் - மலர்போன்ற கண்களை யுடைய பெண்கள்
மலர்க்கண்ணி - பூமாலை; பூப்போன்ற கண்ணையுடையவன்
மலர்க்காவி - செங்கழுநீர்ப்பூ
மலர்க்கிழத்தி - தாமரைமலரில் பிறந்த பெரியபிராட்டி; மகாலக்ஷ்மி
மலர்க்குறிஞ்சி - குறிஞ்சி மலர்
மலர்க்கடி - பூவின் பரிமளம்
மலர்க்கதிர் - மலர்கிற-விரிகிற ஒளி
மலர்த்தவிசு - பூவின் அல்லி, உள் இதழ்
மலர்த்தலை மாஞாலம் - நாபீ கமலத்தை அடியாக உடைய பெரியபூமி
மலர்ந்த போதைத்தேன் - புதிய தேன்
மலர்ந்த வம்மான் - நுண்ணிய சித்தான அறிவின் பொருளையும் அசித்தான அறிவில்பொருளையும் தனக்கு சரீரமாகக் கொண்டு பரந்திருக்கிற ஸர்வேச்வரன்
மலர்நகை - மலர்ந்த புஷ்பம்
மலர்வாளி - புஷ்பபாணம்
மலரவன் - பெரிய பிராட்டி
மலரவிழித்தல் - முழுநோக்காகப் பார்த்தல்

மலரவைத்தல் - பரப்பிவைத்தல்
மலராது குவியாது - வளர்ச்சியும் குறைவும் இல்லாதது
மலரிண்டை - பூமாலை
மலரெடுத்த மாமேனி - மலர்காட்டாநின்ற திருமேனி; மலர்-காயாமலர்; காயாமலர்காட்டும் கறுத்த மென்மைமிக்க திருமேனி அல்லது திருமேனி காட்டும் காயாம்பூ
மலரெட்டு மிட்டு - கருமுகை, கற்பகம், சௌகந்தி, நாழல், மந்தாரம், செங்கழுநீர், தாமரை, கைதை என்ற எண்வகையான மலர்களை சமர்ப்பித்து
மலரேறவிடுதல் - புஷ்பங்களை ஸமர்ப்பித்தல்
மலிகதிர் - கனத்தகதிர்
மலிதண்டு - மிடுக்குமிக்க தண்டு; கெதை.
மலிந்தாள் - கைகடந்தாள்; கைவிஞ்சினாள்; மீட்கப்போகாதபடி போனாள்
மலிந்து திருவிருந்த மார்பன் - திருமலிந்து இருந்த மார்பன்-அதாவது பெரிய பிராட்டியார் தன் பெருமை தோற்ற எழுந்தருளியிருந்த மார்பையுடைய எம்பெருமான்
மலிபெடை - அநுபவ இனிமையில் விஞ்சிய பெடை
மலியப்புகுதல் - நெருங்கி இருத்தல்; நிறையப்புகுதல்
மலியலவன் - பெரிய வடிவையுடைய ஆண் வண்டு
மலினம் - குற்றம்; தோஷம்
மலைக்குட்டன் - மலை ஈன்ற குட்டி போன்றவன்
மலைகீழது பிளந்த சிங்கம் - மலையைக்கீழே இட்டுக்கொண்டு மேலே இருந்து அத்தைப்பிளந்த சிங்கம்
மலைகுலாமாடம் - மலைபோலேயிருக்கும் மாடம்
மலைச்சார்வு - குறிஞ்சி; கொல்லைநிலம்
மலைத்தல் - தகையப்படுதல்; போரிடுதல்
மலைத்தசெல் சாத்து - தகையப்பட்ட செல்சாத்து-யாத்திரைக்கூட்டம்
மலைதாளுமெழ - மலைகள் அடிபெயர்ந்து போக
மலைந்து - எதிரிட்டுச்சென்று
மலைப்பண்டம் - மலைச்சரக்கு; மலையில் விளையும் பலபொருள்
மலைமகள் - பார்வதி
மலையமான்கள் - ஆத்மவிசேஷத்தில் தலையாரிகள், அதாவது திருக்கோவிலூரைச் சேர்ந்த அரசன் மலையமான். அவன் மிக்க பரிவோடு திருக்கோவிலூர் எம்பெருமானைப்பாதுகாத்து வந்தான். ஆதலால் அவர்களை ஆத்மாவைக் காவல் காக்கும் தலையாரியாக தி.ப். அகராதிகூறும்.
மலையாளர் வளைப்பு - மலையாளர், ஒருவன் பக்கலில் ஒன்றை வாங்க நினைத்தால் வாங்கியல்லது போகாதபடி வளைத்துக் கொள்வார்கள்
மலையாளரூட்டு - மலையாளர்கள் உண்டால் ஒரு சமயமே பத்தெட்டு நாளைக்கு உண்ணவுமாய், பட்டினியிருந்தாலும் அவ்வளவு நாள் இருக்கவும் வல்லாயிருத்தல், ஊட்டு-உணவு
மழமை - இளமை
மழக்களிறு - யானைக்குட்டி
மழலை - இளஞ்சொல்; தெளிவில்லாத;
மழலைச்சொல் - மென்சொல்
மழலைதீரவல்லார் - இளமை தீரவல்லார்; அறிவின்மையோடே சொல்ல வல்லவர்கள்
மழலைத்தேன் - இளந்தேன்; புதுத்தேன்; மழறு-தேனுக்குப் பொருள்
மழறுதேன் - கலங்கினதேன்
மழு - பரசு; காய்ச்சின இரும்பு; கோடாலி முதலான ஆயுதம்
மழுக்கொண்டவன் - கோடாலியை ஆயுதமாக உடைய பரசுராமன்
மழைக்கூந்தல் - மேகங்கள் போன்ற கூந்தல்
மழை மதத்த சிறுதறுகண் கரி - மழைபோன்ற மதநீரையும் சிறுத்துக்கொடிய கண்களையுடைய யானை
மழைமொக்குகள் - மழைக்குமிழி
மழையுயிர் தேஷவும் - மழையும் பிராணிகளும் தேவர்களும்
மள்ளர் - உழவர்; வலையர்
மற்கடம் - குறங்கு
மற்களம் - மல்லர்கள் போர் செய்யும் யுத்தபூமி
மற்பு - மல்லர்
மற்றென்றியும் - அதுக்குமேலே
மற்றூரியலாவார் - மற்றுஆர் இயலாவார்; அடையப்படுமவர்கள்
மற்றொருமல்லை - மற்று ஒருவருமில்லை
மற்று - அது ஒழிய
மற்றேலொன்றறியேன் - மற்றொன்று அறியேன்
மற்றை - மற்று

மற்றுறையமமரர் - மற்றுமுள்ள தேவர்கள்
மற்றைப்படியாகில் - கோபமாகில்; வெற்றிகிட்டாவிடில்
மறக்குலவேடர் - காட்டில் திரிபவர்கள்
மறங்கொளிரணியன் - சீறிவெகுண்ட இரணியன்
மறஞ்சுவர் - கொடுமை
மறந்தகாலத்தும் - மறுத்தகாலத்தும்
மறந்திகழுமனம் - மறம்-கொலையும் சினமும் கொடுமையும் இவற்றால் விளங்கா நின்ற மனம்
மறந்துகாண் - மறந்து பார்
மறந்துறத்தல் - கோபத்தை விடுதல்
மறந்துறைவு - காணுமலிருத்தல்
மறப்பு - நினைவின்றியிருக்கை
மறுதொழிதல் - மறுக்காமலிருத்தல்; மறுத்து ஒன்றும் சொல்லாதிருத்தல்
மறிகடல் - அலை மாறி வருகிற
மறித்தமலை - கவிழ்த்த மலை
மறிகிலி மறுகு - விதி கடல்
மறித்து - திரும்பியும், கைகழியப்போகாமல் மடங்குவித்து
மறித்துப்பார்த்தல் - திரும்பிப்பார்த்தல்; மீண்டும் ஒருதடவையளித்தல்
மறிதாக்கீண்டு - கீழ்மேலாகத்திரும்பி
மறிந்தெழுதல் - விரித்தெழுதல்; பரம்பி எழுதல்
மறம் - பெண்மையால் வந்த கர்வம்; கோபம்; அருளின்மை; கொடுமை
மறுக்குகை - மனந்திரியப்பண்ணுகை; இல்லாமல் போகை
மறுக்குதல் - கலக்குதல்
மறுகரை - அக்கரை; எதிர்க்கரை
மறுகண்ணியும் பொத்தி - வேறு முடிச்சையும் மறைத்து
மறுகல் - வயிற்றெரிச்சல்; கலக்கம்
மறுகலிலீசன் - குற்றமில்லாத ஸர்வேச்சுவரன்
மறுகாலின்றி - மற்றைப்போது இல்லாமல்
மறுகுதல் - அஞ்சுதல்
மறுத்தும் - மீட்டும்
மறுதலைக்கை - எதிரிடுகை
மறுத்தும் - மறுபடியும் மறுபடியும்
மறுநினையும்படி - மறுபாடுவுருவநினைந்து; அதாவது நன்ருக கல்லது மீண்டும் நினைந்து என்றபடி
மறுபாடுறுவ - உட்புக்குப் பின்னே புறப்பட; அப்பால் உருவ; நன்ருக மூழ்கி; மறுபக்கம் ஊடுருவித் தொலைத்து வெளிப்படும்படி
மறுநோக்கிலள் - வேறொன்றிலும் நோக்கிலள்; வேறொனறையும் பார்க்கிலள்
மறுநோய் செய்வான் - மீண்டு வருகிற துக்கமான வாசனையைப் போக்குகிறவன்
மறுமனஸ்ஸீப்படும் - மனம்மாறும்
மறுமார்பன் - அடையாளமுள்ள மார்பன்
மறுமாற்றங்கள் - மறுமொழி
மறுமுட்டுப்பொருதபடி - வேறொரிடத்திலே போனாலும் வினியோக யோக்யமின்றிக்கே இருக்கை; மற்றொரு காரியத்துக்கு ஆகாதபடி; புறம்பு விலை செல்லாதபடி
மறுமை - மறுபிறவி; அதிர்ஷ்டம்
மறுவடையாதபடி - மீளாதபடி
மறுவலிடும் - மீண்டும் வரும்
மறைகொண்ட மந்திரம் - வேதம்; புருஷ ஸூக்தம்
மறைந்துவராய் - பிறர்க்குத் தெரியாதபடி உவராய்-வெகுதூரத்திலும் வெகு அருகிலும் இல்லாமல்.

(தொடரும்)

## இறைவனை அடைவதற்குரிய நால்வகை நெறிகள்

சைவ சமயக் குரவர்கள் நால்வரும் மேற்கொண்டொழுகிய பக்தி நெறியினை இந்து சமயம் நால்வகையாகக் கூறுகிறது. அவை:

1. சரியை: தாச மார்க்கம்: அடிமையாயிருந்து பக்தி செய்யும் முறை. திருநாவுக்கரசர் வரலாறு எடுத்துக்காட்டு.

2. கிரியை: சர்ப்புத்திர மார்க்கம் : மகனாக இருந்து பக்தி செய்யும் மார்க்கம். திருஞான சம்பந்தர் வரலாறு சான்ருகும்.

3. யோகம்: சக மார்க்கம்: தோழனாக இருந்து பக்தி செய்யும் முறை. சுந்தரமூர்த்தி சுவாமிகள் வரலாறு கூறும்.

4. ஞானம் : சன்மார்க்கம்: ஞான நெறியில் நின்று பக்தி செய்தல், மாணிக்கவாசகர் வரலாறு சான்ருகும்.

தொகுத்தவர்: கமலா மாரியப்பன் - கோவை.

Edited and Published on behalf of T.T. Devasthanams by N.S. Rama Murthy, M.A., and Printed at T.T.D. Press by M. Lakshmana Rao, B.A., L.P.T., Manager, T.T.D. Press, Tirupati - 517 507

திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# ஸ்ரீ வேங்கடேஸ்வரா மத்திய நூலகம் மற்றும் ஆராய்ச்சி மையம்

## விண்ணப்பம்

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரால் 'ஸ்ரீவேங்கடேஸ்வரா மத்திய நூலகம் மற்றும் ஆராய்ச்சி மையம்' ஒன்று ஏற்படுத்தப்பட்டு, அது அண்மையில் தேவஸ்தானத்தின் 1993ஆம் ஆண்டு வைரவிழா ஆண்டு ஒட்டி, பக்தர்களுக்காகத் தொடங்கி வைக்கப் பட்டுள்ளது. இந்தியக் கட்டிடக்கலை மற்றும் நவீன கட்டிடக் கலையைப் பின்பற்றி கட்டப்பட்ட மாபெரும் கட்டிடத்தில் இந்த மையம் தற்போது செயல்பட்டு வருகிறது. இந்து சமயத்தின், இந்திய மண்ணின் பெருமை பேசும் வேதங்கள், உபநிஷதங்கள், இதிஹாஸங்கள், புராணங்கள், தத்துவங்கள், சாஸ்திரங்கள் மற்றும் பகவத்கீதை ஆகியவற்றின் சம்பந்தமான அரிய நூல்கள், ஆவணங்கள் இந்தக் கட்டிடத்தில் இடம்பெற்றுள்ளன. சனாதன தர்மமான இந்து சமயத்தின் பெருமை பேசும் இந்தியக் கலாசாரம், தத்துவங்கள், சமயப் பிரிவுகள், இசை போன்றவற்றின் சம்பந்தமான ஆராய்ச்சிகள் மேற்கொள்ளவும், உரைக்கோவைகள், கருத்தரங்குகள் நடைபெறவும் இந்த மையம் செயல்படும். இந்து சமயம் சம்பந்தமான அரிய , இதுவரை வெளியிடப்படாத ஆராய்ச்சிக் கருத்துக்களும்; சம்ஸ்கிருத மொழியில் உள்ள மூல சமய நூல்கள், மொழிப்பெயர்ப்புகள் அடங்கிய நூல்களை வெளியிடுதலும் இந்த மையத்தின் பெரு முயற்சியாக அமையும். நவீன அச்சகம் ஒன்றினை நிறுவும் எண்ணமும் மேலாண்மையின் பரிசீலனையில் உள்ளது. எனவே, இந்தியக் கலாசாரக் கோயிலாகவும், தலைசிறந்த கல்வி மற்றும் ஆராய்ச்சி நிறுவனங்களுக்கு ஒரு முன்னோடியாகவும் இந்த மையம் திகழ்ந்திடவே மேலாண்மை பெருமுயற்சி எடுத்து வருகிறது. இத்திட்டம் முழு அளவில் வெற்றிபெற, தகுந்த ஊக்கமும், ஆக்கமும், அடிப்படை தேவையாகிறது.

ஆகவே இந்த நூலகத்திற்குத் தாராளமான நன்கொடை அல்லது நூல்கள் வழங்கிடுமாறு பொதுமக்களையும், தனியார் அமைப்புக்கள் மற்றும் நிறுவனங்களையும் மேலாண்மை தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறது. இந்த மையம் தன்னுடைய பொதுப் பணியில் மேலும் சிறந்தோங்கிட, தனிமனிதர்கள் அல்லது தனியார் அமைப்புக்கள் தங்களிடம் உள்ள இந்து சமய மற்றும் தத்துவங்கள் பற்றிய அரிய நூல்கள் அடங்கிய தனி நூலகங்களை இலவசமாக வழங்கிடவும் கேட்டுக்கொள்ளப்படுகிறுர்கள்.

எனவே தயைகூர்ந்து தாங்கள் அனுப்ப நினைக்கும் நூல்கள் அல்லது தொகையினை (வங்கி காசோலை மூலமாக) "சிறப்பு தனி அலுவர் (Officer on Special Duty), ஸ்ரீவேங்கடேஸ்வரா மத்திய நூலகம் மற்றும் ஆராய்ச்சி மையம், திருப்பதி-517502, ஆ. மா." எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும்.

அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பியே
நூலின்றிக் கோட்டி கொளல். --குறள்

